# சுதேசமித்திரன்

வாரப் பதிப்பு





சுபானு௵ மாசி௴ 22௳ (5 - 3 - '44)




## இந்திய வரவு செலவு திட்டம்



சென்றவாரம் இந்தியாசட்டசபையில் நிதி மெம்பர் ஸர் ஜெர்மி ரெய்ஸ்மென் சர்க்காரின் வரவுசெலவு திட்டத்தைச் சமர்ப்பித்துப் பேசி விட்டார். சாதாரண காலத்திலேயே வரவுசெலவுத் திட்டமெனில் ஜனங்கள் கவலையோடு அதை எதிர்பார்ப்பர். இப்போதோவெனில் யுத்த காலம்! அதிலும் இங்கு ஆட்சி புரிவதோ அந்நிய அதிகாரவர்க்கம். அவர்கள் போக்கு வேறு; ஜனங்கள் போக்கு அலாதி. சுதந்திர நாடுகளில் தங்கள் கஷ்டங்களைச் சர்க்கார் உணர்ந்து சரியான நிவாரணம் தேடுவர் என்ற நம்பிக்கை ஜனங்களுக்கு உண்டு. காரணம் அவர்களது பிரதிநிதிகள் அதிகார பீடத்திலிருப்பதுதான். ஆனால் இங்கு நிலைமை தலைகீழ் பாடம்! இந்தியாவின் நலன்களைப் பாதிக்கக்கூடிய எந்த முக்கியமான விஷயமாயிருப்பினும் இந்நாட்டு மக்களைக் கலந்து செய்வதென்பதுகூட அவசியமாகத் தோன்றக் காணோம். அப்படி ஜன சம்மதத்தைப் பெற்று எதுவும் செய்ய வேண்டுமென்றகவலையும் இங்குள்ள அதிகாரவர்க்கத்துக்கு இல்லை. யுத்தத்தில் இந்தியாவை அவர்கள் சிக்க வைத்ததே இதற்குச் சான்று. இந்தியர்களைக் கலந்து பேசுவது போல அவர்கள் பாசாங்கு கூடச் செய்யவில்லை. வரவுசெலவுத் திட்டத்தில் மதிப்பீடுகள் கூடியமட்டிலேனும் சரிவர இருக்க வேண்டுமென்ற சிரத்தை சர்க்காருக்கு இருப்பதாகவும் தெரியவில்லை. யுத்தம் வலுக்க வலுக்க இந்த அலட்சிய எண்ணமும் பெருகியே வருவதாகக் காண்கிறது.

யுத்தச் செலவு எதிர் பார்த்ததைவிட அதிகரித்த வண்ணமாயிருக்கிறது. ஆனால் சர்க்காருக்குப் பணத்துக்கு என்ன செய்வதென்ற கவலை இருப்பதாகத் தோற்றவில்லை. தங்கள் மனதுக்குப் படும் சகல இனங்களிலிருந்தும் கூடிய வரை அதிகமாக வசூலித்து வைத்துக்கொள்ளக்கிளம்பிவிட்டார்கள். செலாவணிப் பெருக்குக் கேட்டைச் சமாளிப்பதே வரிச் சுமையை ஏற்றுவதன் நோக்கமென கூசாமல் பேசுகின்றனர். சென்ற சிலதினங்களாக வெளியான ஊகங்களிலிருந்து சர்க்காரின் வரித்திட்டம் கடுமையாயிருக்குமென பலர் எதிர்பார்த்தார்கள். இக்கேட்டுக்குப் பொறுப்பாளிகள் சர்க்காரே. அதையே அவர்கள் வரி உயர்வுக்குக் காரணமாக் காட்டுகின்றனர். அதிகப்படி வரிகள் மூலம் ரூ. 23½ கோடி வசூலிக்க ஏற்பாடு. இன்னும் இதைவிட வரித்திட்டம் மோசமாகவில்லாமற் போயிற்றே என்று பலர் திருப்தியடைவர். ரூ. 1500க்குப் பதிலாக ரூ. 2000க்கு குறைந்த வருமானக்காரர்களுக்கு வருமான வரியில்லை. ஆனால் காப்பிக்கொட்டை, தேயிலை, பாக்கு இவைகளுக்குப் பவுண்டுக்கு 2 அணா வீதம் தீர்வை விதித்திருப்பதால் வாழ்க்கைச்செலவு இன்னும் உயரும். ஏழைகளை அது மிகவும் பாதிக்கும். திட்டத்தில் விசேஷ மாறுதல் ஏதும் ஏற்படுமென எண்ண இடமில்லை. தற்போதைய சட்ட சபையில் நடக்கும் விவாதத்தில் மாறுதலை எதிர் பார்க்க இடமே கிடையாது. அதன் அமைப்பும், நீடித்த ஆயுளும் இதற்குப் போதிய ருசுக்கள்.

# சென்ற வார நிகழ்ச்சிகள்

## ரயில்வே வரவு செலவு : சர்க்கார் தோல்விகள்

இந்தியா சட்டசபையில் ரயில்வே வரவு-செலவுத் திட்டம்பற்றி மூன்றுநாள் விவாதம் நடந்தது. இதில் சர்க்காருக்கு நான்கு தோல்விகள். ரயில்வே பிரயாணிகளின் கட்டணங்களை கால் பாகம் உயர்த்துவதென்ற யோசனையை சபை நிராகரித்து விட்டது. அடுத்தபடியாக சர்க்காருக்கு ஏற்பட்ட தோல்வி, ரயில்வே சிப்பந்திகளில் அனைவருக்கும் 'கட்டாய பிராவிடன்ட் நிதி' வசதி இல்லாதது பற்றியதாகும். 5லக்ஷம் ரயில்வே ஊழியர்கள் மாதம் ரூ. 20-க்கும் குறைவாக சம்பளம் வாங்குகின்றனர். மிகக் குறைந்த சம்பளம் வாங்குவதால் அவர்களை பிராவிடன்ட் நிதியில் பணம்போடும்படி கட்டாயப்படுத்துவது கூடாதென்று சொல்வது சீரான வாதமா? இதற்குப் பரிகாரம் அவர்களுடைய சம்பள விகிதத்தை உயர்த்துவதுதான்.

வயது மிஞ்சிய அதிகாரிகளின் உத்தியோக காலத்தை மேன்மேலும் நீடித்துக் கொண்டிருக்கும் அநீதியைப் பற்றியது சர்க்காரின் அடுத்த தோல்வி. ஆயிரக் கணக்கில் சம்பளம் வாங்கும் ஐரோப்பிய அதிகாரிகள் விஷயத்தில் சர்க்கார் இம்முறையை வெகு தாராளமாகக் கையாண்டு வருகிறார்கள். உயர்தர உத்தியோகங்களை இந்தியமயமாக்கும் திட்டம் ஏற்கனவே எவ்வளவு வேகமாக நடந்தேறி வந்திருக்கிறதென்பது பிரசித்தம். இப்போதோ அத்திட்டம் அடியோடு ஸ்தம்பித்து விட்டது! ஐரோப்பியர் வகிக்கும் பதவிகளுக்குத் தேவையான பயிற்சியை இவ்வளவு காலமாக இந்திய அதிகாரிகளுக்கு ஏன் அளித்திருக்கக் கூடாது? பயிற்சிபெற யோக்கியதையுள்ள இந்தியர்கள் அகப்படவில்லையென்று வாதிப்பது அபத்தம். பொறுப்புள்ள முக்கியப் பதவிகளை எந்நிலையிலும் இந்தியரிடம் விட்டுவிடக் கூடாதென்பதே கருத்தாயிருக்க வேண்டும்.

பிரயாணிகளது வண்டிகளைப் பெருவாரியாக குறைத்து விட்டதையும் இந்தியா சட்டசபை பலமாகக் கண்டித்திருக்கிறது. ரயிலில் இட நெருக்கடியால் ஜனங்கள் படும் அல்லல்களை விவரிக்க இயலாது. ஆனால் வண்டிகளின் எண்ணிக்கையை அதிகரிக்க நிலக்கரி கஷ்டம் குறுக்கே நிற்பதாகப் போக்கு வரத்து மெம்பர் வாதித்தார். சென்ற வருஷமே நிலக்கரி பஞ்சம் தலையெடுத்து விட்டது. அது ரயில்வே அதிகாரிகளுக்குத் தெரியாதா? தெரிந்திருந்தும், அவர்களே மார்க்கட் விலையைவிட அதிக விலையில் நிலக்கரி வாங்கி மத்தியக் கிழக்கு முதலிய பிரதேசங்களுக்கு அனுப்பியதாக ஜனாப் கஸ்னவி சுட்டிக் காட்டினார். இத்தகைய குருட்டுத்தனத்தால் விளைந்த விபரீதத்தையே அதிகாரிகள் ரயில் வண்டிகளைக் குறைக்கக் காரணமாக உபயோகிக்கின்றனர். போர் முடிந்த பின் ரயில்வே அபிவிருத்திக்காக போக்கு வரத்து மெம்பர் ஏழு வருஷத் திட்டம் ஒன்றை அமைத்திருக்கிறார். இதை நிறைவேற்ற 319 கோடி ரூபாய் செலவாகுமாம். இந்நாட்டிலுள்ள ரயில்வே போன்ற சாதனங்கள்மீது பிரிட்டனுக்குள்ள பிடிப்பை இனியும் நீடிக்கத் தான் அத்திட்டமெனத் தோன்றுகிறது. ஆனால் அன்னியர் வைத்ததே சட்டமாக இருக்கும் இந்த ஆட்சியில் வேறு திட்டங்களை எதிர் பார்ப்பது எப்படி?

* * * * *

## ரயில்வே கட்டண உயர்வு

10 மைல்களுக்குள் பிரயாணம் செய்பவர்களை ரயில்வேக் கட்டண உயர்வு பாதிக்காது. அதாவது அவர்களுக்கெல்லாம் அதிகக் கட்டணம் கிடையாது. ஸீஸன் டிக்கெட்டு உள்ளவர்களுக்கு அளிக்கப்பட்டிருக்கும் விலக்கு, 10 மைல்களுக்குள் பிரயாணம் செய்பவர்களுக்கும் அளிக்கப்பட்டிருக்கிறது. இதை ஸர் எட்வர்டு பெந்தால் சட்டசபையில் விவாதத்துக்குப் பதிலளிக்கையில் தெரிவித்தார்.

## "லீடர்" ஆபிஸில் போலீஸ்!

'லீடர்' பத்திரிகையில் பிப்ரவரி 11-ந் தேதி 'காசி சமஸ்தான நிர்வாகம்" என்ற தலைப்புடன் ஒரு கடிதம் வெளியாயிற்று. அதன் கீழே "சமஸ்தான பிரஜை" என்று கையொப்ப மிடப்பட்டிருந்தது. இதன் நகல் வேண்டுமென்று ஆசிரியரைப் போலீஸார் கேட்டார்களாம். பத்திரிகைத் தொழிலுக்கு இது ஏற்ற காரியமல்ல என்று கடிதத்தின் நகலைக் கொடுக்க ஆசிரியர் மறுத்ததாகவும் அதன் மேல் ஜில்லா மாஜிஸ்டிரேட் பாதுகாப்புச் சட்டப்படி சோதனைக்கு ஒரு வாரண்டு பிறப்பித்ததாகவும் அந்த வாரண்டுடன் இரண்டு போலீஸ் உத்தியோகஸ்தர்கள் அச்சுக் கூடத்துக்கு வந்து அந்தக் கடிதத்தின் நகலை எடுத்துச் சென்றதாகவும், ஆசிரியர் பண்டித கிருஷ்ணராம் மேட்டா பத்திரிகை நிருபரிடம் அறிவித்தார்.

* * * *

## மாலையில் கலியாணம்! காலையில் தற்கொலை!!

பாட்னா ஹைகோர்ட்டைச் சேர்ந்த ஜஸ்டிஸ் மனோஹரலாலின் புதல்வர் மிஸ்டர் பிரபால்லால் என்பவர் சமீபத்தில் அவரது அறையில் தலையில் துப்பாக்கி காயத்துடன் மாண்டுகிடந்தார். கையில் ரிவால்வர் ஒன்றிருந்தது. அன்று மாலை இவருக்குக் கலியாணம் நடக்கவிருந்தது. இந்த வாலிபர் இவ்வருஷம் சட்ட பரீக்ஷைக்குப் போயிருந்தார். டென்னீஸ் பந்தாட்டத்தில் இவருக்கு நல்ல பெயர்.




## பர்மா போர் முனை

அரக்கான் பகுதியில் சென்ற மூன்று வார காலமாக நடந்து வந்த போர் நேசக் கட்சிக்குச் சாதகமாக முடிந்திருக்கிறது. சில தினங்களுக்கு முன் நேசப் படைகளுக்கு நிலைமை நெருக்கடியாயிருந்தது. மாயு மலைத் தொடருக்குக் குறுக்கே செல்லும் பாதையை ஜப்பானியர் கைப்பற்றி விட்டது காரணமாக, அதற்குக் கிழக்கே சென்றிருந்த நேசத் துருப்புகள் துண்டிக்கப்பட்டு விட்டன. மாங்டா பகுதியிலுள்ள நேசப் படையின் சப்ளை மார்க்கங்களுக்கும் ஆபத்தேற்பட்டது. இதே சமயத்தில் மாங்டாவுக்குக் கிழக்கேயுள்ள நாப் என்ற நதியைக் கடந்து இந்திய பூமியில் இறங்கவும் ஜப்பானியத் துருப்புகள் முயன்றன. அம்முயற்சி குலைக்கப்பட்டு விட்டது. அதுமட்டுமின்றி, துண்டிக்கப்பட்ட நேசப் படைகள் தீவிரமாக எதிர்த்து நின்ற பிறகு அவைகளே முன்னேறித் தாக்கலாயின. இதன் பலனாக முன்பு முற்றுகை போட்டிருந்த ஜப்பானியரே பிறகு வளைத்துக் கொள்ளப்பட்டு விட்டனர். பிறகு நடந்த போராட்டத்தில் எதிரிக்குக் கடுஞ்சேதமென அறிவிக்கப்படுகிறது.

## ரஷ்ய அரங்கம்

ரஷ்யப் போர்முனையில் சில பகுதிகளில் ஜெர்மன் எதிர்ப்பு வலுத்திருக்கிறதாயினும், சோவியத் முன்னேற்றம் தடைபடவில்லை. பால்டிக் நாடுகளுக்கு வாயில்போல் உள்ள பிஸ்காவ் என்ற தளத்திற்கும் ரஷ்ய முன்னணிப் படைகளுக்கும் 10 மைல் தூரங்கூட இல்லை. எப்படியும் பிஸ்காவைக் காத்தாக வேண்டுமென்றும், இதற்காக எத்தகைய தியாகத்தையும் பெரிதாகக் கருதக்கூடாதென்றும் ஹிட்லர் அங்குள்ள ஜெர்மன் தளகர்த்தருக்கு உத்தரவிட்டிருக்கிறார். போலந்தில் ரஷ்யர்கைப்பற்றிய லக்நகருக்கு மேற்கிலும், வடமேற்கிலும் ஜெர்மனியர் தீவிரமாகத் திருப்பித் தாக்கி ஓரளவு முன்னேறியதாகவும், ஆனால் பிறகு அவர்கள் திருப்பியடிக்கப்பட்டனரென்றும் ஸோவியத் அறிக்கை கூறுகிறது. தென்அரங்கத்தில் ரஷ்யப் படைகள் நீபர்கரையோரமாக கெர்ஸானை நோக்கி முன்னேறிக் கொண்டிருக்கின்றனர்.

## இத்தாலியில் தீவிர எதிர்ப்பு

இத்தாலியில் அன்ஸியோ முனையில் நேசப்படைகளுக்குச் சங்கடம் அதிகரித்திருக்கிறது. அவற்றைக் கடலுக்குள் தள்ளுவதே எதிரியின் நோக்கம். அங்கு அதிகமான ஜெர்மன் படைகள் வந்து சேர்ந்திருக்கின்றன. ஆனால் அந்நோக்கம் நிறைவேற இடங்கொடுக்காமல் நேசத் துருப்புகள் தீவிரமாக எதிர்த்துப் போராடி வருகின்றன. மற்றொரு போர் முனையான காஸினோ பகுதியிலும் எதிரிகளது தாக்குதலின் வேகம் வலுத்திருக்கிறது.

* * * *

## ரஷ்யப் பத்திரிகையின் புகார்

ரஷ்யப் பொதுவுடமைக் கட்சிப் பத்திரிகையான 'பிரவ்டா' பத்திரிகை அமெரிக்காவில் பல பத்திரிகைகளின் சொந்தக்காரராக விளங்கும் மிஸ்டர் வில்லியம் ராண்டல்ப் ஹியர்ஸ்டைத் தாக்கி எழுதிய வியாசமொன்றை வெளியிட்டிருக்கிறது. அதில் குறிப்பிடுவதாவது:—மிஸ்டர் ராண்டால்ப் ஹியர்ஸ்ட் ஹிட்லரது அமெரிக்க நண்பராவார். பிரிட்டன், யுனைடெட்ஸ்டேட்ஸ், சோவியத் ரஷ்யா இவற்றின் சிறந்த புத்திரர்கள் தங்களது தேச மக்களது சுயேச்சைக்காகவும் மானிடவர்க்கத்தின் கதிமோக்ஷத்திற்காகவும் ஜனநாயக முறை, நீதி இவற்றிற்காகவும் தங்களுடைய ரத்தத்தைச் சிந்தி வருகையில், ஹியர்ஸ்டின் கூலியாட்கள் ஹிட்லரை ஆதரிக்கின்றனர். அவர்



பிரஞ்சிந்திய கவர்னர் மே. த. லூயிபான்வின் காரைக்கால் வந்திருந்தபோது பத்திரிகைப் பிரதிநிதிகளுக்குப் பேட்டி அளித்தார். அப்போது எடுத்த படம்.

கள் ஐரோப்பாவில் கொள்ளைக்கார ஹிட்லரின் வாழுமிடத்தைப் பாதுகாக்க விஷத்தன்மை வாய்ந்த பிரசாரத்தைப் பத்திரிகைகளில் நடத்தி வருகின்றனர்.

* * * *

## லண்டனில் கடும் குண்டு வீச்சு

ஜெர்மன் விமானங்கள் லண்டன் மீதும் அதனை அடுத்த ஜில்லாக்கள் மீதும் தென் இங்கிலாந்து, தென்கிழக்கு இங்கிலாந்து இவற்றின் மீதும் குண்டுகளை வீசுகின்றன. லண்டனுக்கருகில் ஹாலந்து ராணியான வில்ஹெல்மினு (63 வயது) வசித்துவந்த வீட்டுக்கருகில் ஒரு குண்டு விழுந்தது. அதனுல் ராணியின் வீட்டிலுள்ள 2 பேர் இறந்து போயினர். ராணி தெய்வாதீனமாக உயிர் தப்பினுர். அவருக்குக் காயங்கூடப் படவில்லை.

விலை மதிக்க முடியாத புராதன பொருள்களும், சித்திரங்களும் உலகின் பல பாகங்களிலிருந்தும் லண்டனில் ஒரு பிரதேசத்தில் திரட்டி வைக்கப்பட்டிருந்தன. எதிரி விமானத் தாக்குதலால் இவை அழிந்து போயின. தொழிலாளர் வசிக்கும் ஒரு பெரிய கட்டடம் விழுந்துவிட்டது. இதனடியில் பலர் அகப்பட்டுக் கொண்டனர்.

* * * *

## சர்ச்சில் குமாரர் யுகோவில் இருக்கிருர்

பிரிட்டிஷ் பிரதம மந்திரியின் புத்திரர் காப்டன் ரண்டால்ப் சர்ச்சில் சில வாரங்களுக்கு முன்பு யுகோஸ்லேவியா வந்து சேர்ந்தார். அங்கு சுதந்திரப்படைத் தலைவரான ஜெனரல் டிடோவுடன் அவர் தொடர்பு வைத்துக்கொண்டிருக்கிருர். புது வருஷம் பிறந்ததும் காப்டன் சர்ச்சில் யுகோஸ்லேவியா போய்ச் சேர்ந்தார். அவர் பாரசூட் மூலம் அங்கு இறங்கியிருக்க வேண்டும். அவருக்கு 32-வயதாகிறது.

## நேச தேசத்தினருக்கு படோக்ளியோ வேண்டுகோள்

சென்ற ஞாயிற்றுக்கிழமை இரவு மார்ஷல் படோக்ளியோ பின் வருமாறு தெரிவித்தார்:—

ஜெர்மனியுடன் நடத்தும் போரில் இத்தாலிய சர்க்காரை ஒரு நேசதேச சகாவாக ஏற்றுக் கொள்ளும்படி நான் யுனைடெட் ஸ்டேட்ஸ், பிரிட்டிஷ் கவர்ன்மெண்டுகளை வேண்டிக் கொண்டேன். ஆனுல் இக்கோரிக்கை ஏற்கப்படுமென்று எனக்குத் தோன்றவில்லை. நேச தேசத்தினர் ஆயுதங்களும், உடை முதலிய இதர சாதனங்களும் அளித்தால் நான் 10 இத்தாலிய டிவிஷன்களைப் போர்க்களத்தில் நிறுத்த முடியும்.

* * * *

## ரஷ்யாவுக்கு அமெரிக்க உதவி

அமெரிக்க இரவல் சட்டப் பிரகாரம் 1944-ம் வருஷம் ஜனவரி மாதம் முதல் தேதி வரை 7800 விமானங்கள் அமெரிக்காவிலிருந்து ரஷ்யாவுக்கு அனுப்பப்பட்டன. இதே காலத்தில் 4700 டாங்கிகள் அங்கு அனுப்பப்பட்டன; 170000 ட்ரக்குகளும் ரஷ்யாவுக்குச் சென்றன. மொத்தத்தில் சென்ற வருஷம் அளிக்கப்பட்ட உதவி அதற்கு முந்திய வருஷத்தைவிட இரண்டு மடங்கு அதிகம் எனத் தெரிகிறது.

* * * * *

## பிரஞ்சு மக்களுக்கு ஜெர்மன் சேனுபதி எச்சரிக்கை

பிரான்ஸிலுள்ள ஜெர்மன் சேனுதிபதியான பீல்டு மார்ஷல் வான் ரன்ட்ஸ்டெட் பிரெஞ்சு மக்களுக்கு விடுத்துள்ள எச்சரிக்கை வருமாறு:-

பிரெஞ்சுப் பிரதேசத்தில் இறங்குகின்ற நேசதேச பாரசூட் படையினருடன் தொடர்பு எதுவும் கொள்ளக்கூடாது. பிரான்ஸில் சுட்டு வீழ்த்தப்படுகின்ற அல்லது பாரசூட் மூலம் இறங்குகின்ற அல்லது விமானங்களிலிருந்து மீட்கப்படுகின்ற பிரிட்டிஷ்—அமெரிக்க அல்லது இதர நேசதேச விமானிகளுக்குப் பதுங்கிக் கொள்ள இடமளிக்கக்கூடாது. பிரான்ஸ்மீது நேசப்படையினர் எறிகின்ற யுத்ததளவாடங்களையும் இதர பொருள்களையும் எவரும் பொறுக்கி எடுக்கக் கூடாது. இந்த உத்தரவுகளை மீறி நடக்கிறவர்களுக்குக் கடும் தண்டனை விதிக்கப்படும். பெரிய குற்றங்களைச் செய்பவர்களுக்கு மரண தண்டனைகூட விதிக்கப்படும்.






# 'சாந்திமத் தீவில்'

★

**வ. வேணுகோபாலன்**

நாககன்னிகை எவ்வாறு சிறைப்பட்டாள்? சிறைப்படக் காரணம் என்ன? அதன்பின் அவள் நிலைமை என்ன ஆயிற்று?- என்றவாறெல்லாம் பலபல கேள்விகள் எழும். ஆம்! அவற்றை அறியவேண்டியதும் அவசியந் தானே! நாககன்னிகை மட்டுமா?—நீலன் முதலிய வீரர் யாவருமே சிறைப்பட்டனர் என்றால் அது பேராச்சரியம் அல்லவா?—

## சாந்திமத் தீவிலே

நீலன் பெரிய வீரன் என்பது உண்மையே; போர்த்திறமை மிக்க வீரர் பலர் அவனுடன் இருந்தனர் என்பதும் உண்மை தான். ஆனால் சாந்திமத்தீவிலிருந்து வந்த வேளிர் கூட்டத்துக்குமுன், அவர்கள் என்ன செய்ய முடியும்? போர் செய்தலையே தொழிலாகக் கொண்ட வேளிர் கூட்டத்துக்குமுன் நாக நாட்டு வீரர் யாவரும் தலைபணிய வேண்டியதாயிற்று. அதைப் பற்றிச் சிறிது அறிந்துகொள்ள வேண்டாமா?

சாந்திமத்தீவு, நாகநாட்டிற்கும், காவிரிப்பட்டினத்திற்கும் இடையே உள்ளது. பழந்தமிழ்த் தீவுகள் பலவற்றில் அதுவும் ஒன்று. அந்தத் தீவிற்கும் காவிரிப்பட்டினத்திற்கும் நெருங்கிய தொடர்பு முன்பு இருந்தது. உண்மையைச் சொல்லுமிடத்து அந்தத் தீவே சோழர்களுக்கே உரியது எனலாம்.

## அகத்தியர் ஆக்ஞைபடி ஆட்சி

காவிரிப்பட்டினத்தில் இருந்து சோழநாட்டை ஆண்டு வந்த முடிமன்னர்களில் காந்தமன் என்பவன் பழமையானவன். சோழர் குலத்து முதல்வன் என்றே அவனைக் கூறலாம். சோழநாட்டிலே காவிரியைக் கொணர்ந்தவனும் அவனே. நாட்டின் வளத்தை கருதி, மிகவும் வருந்திய காந்தமன், அங்கு வந்திருந்த அகத்திய முனிவரிடம் வேண்டிக் கொண்டான். அவனிடம் அன்புகொண்ட அகத்தியர் தம்முயற்சியால் காவிரியாற்றைச் சோழநாட்டிலே பாயும்படி செய்தார். காந்தமன் மிகவும் மனக்களிப்புக் கொண்டு அகத்தியரின் ஆக்ஞைப்படி நாட்டை ஆண்டு வந்தான். வடநாட்டிலிருந்து தென்னாட்டிற்குக் குடிபுகுந்த அகத்தியரும் சோழ மன்னனின் ஆதரவில் இருந்துகொண்டு அவனுக்குப் பலவழியிலும் புத்தி புகட்டி வந்தார்.

## பரசுராமனிடமிருந்து தப்ப

அந்நாளிலே காந்தமன் பெருஞ் சோதனைக்கு உள்ளானான். அதாவது அவன் உயிருக்கே ஆபத்து வரும்போல் இருந்தது. அதற்குக் காரணம் அவன் சூரிய குலத்து அரசன் என்பதே. அகத்தியர் உதவியாக இருந்த அந்நிலையிலும் அவனுக்கு ஆபத்து நேர்ந்தது. அரசகுலத்தையெல்லாம் வேர் அறுத்தலையே, விரதமாகக் கொண்ட பரசுராமன், பலநாடுகளையும் சுற்றிக் கொண்டு சோழநாட்டையும் அணுகத் தலைப்பட்டான். 'பரசுராமன்' என்ற பெயர் கேட்ட அளவில், அரசர்குலமெல்லாம் அலறி ஓடிப்பதுங்கும் காலம் அது. 'பாரதபூமியிலே அரச குலம் வேரற்று போகும்படி செய்வேன்! அரசகுலத்தை வேரறுத்தல்லாமல், ஓரிடத்தில் நிலையாக அமரேன்,' என்று கர்ச்சித்துக் கொண்டு பரசுராமன் திரிந்துகொண்டிருந்தான். சோழநாட்டிலே ஆட்சி செலுத்தும் சோழனும் சூரியகுலவேந்தன் தான் என்று அறிந்தவுடன், பரசுபாணியாய்க் காவிரிப்பட்டினத்தை நோக்கி அவன் வந்துகொண்டிருந்தான். அதை உணர்ந்த காந்தமன் நடுங்கினான். அவன் மீது இரக்கம்கொண்ட, அந்நகர்த்தெய்வமாகிய துர்க்கா தேவி, அவன் முன் தோன்றி, "பரசுராமன் வருகிறான். அவன் கண்முன் நீ தென்படாதே" என்று கூறிமறைந்தாள். காந்தமன் என்ன செய்வது என்று அறியாதவனாய்த் தவித்தான். அகத்தியரை அணுகி என் செய்வதென்று பணிந்தான். உடனே அகத்தியர் யோசித்து, "காந்தம! நீ இவ்விடத்தை விட்டு அகன்று அருகிலே உள்ள சாந்திமத் தீவிலே சில நாட்கள் மறைந்திரு. அது வரையில், காவற் கணிகையிட

மாக உனக்குப் பிறந்த மகன் சுகந்தனை அரசனாக நியமித்துவிட்டுச் செல். அவன் அரசாளும் உரிமை பெற்றவன் அல்ல! ஆதலால் அவனைப் பரசுராமன் அணுகான். அவன் திரும்பிச் சென்ற பின்னர் உனக்கு உணர்த்துகிறேன். அதன்பின் நீ இங்கு வரலாம். விரைவில் சாந்திமத் தீவிலே சென்று மறைந்திரு'' என்று கட்டளையிட்டார்.

## 'காகந்தி' நகர்

காந்தமனுக்கு அதுவே நேர்மையாகப்பட்டது. உடனே, தனக்குக் கணிகையிடம் பிறந்த ககந்தன் என்பவனை அழைத்தான். கணிகை வயிற்றில் பிறந்தவன் எனினும் அவன் கல்வியறிவுமிக்கவனாக விளங்கினான்.

''ககந்த, நான் அகத்தியர் கூறியனுப்பும் வரையில் அருகில் உள்ள சாந்திமத் தீவிலே இருக்கிறேன். அது வரையில் இந்நாட்டை நீ ஆண்டு வருவாயாக. உன்னால் இந்நகருக்கும் 'காகந்தி' என்ற பெயர் உண்டாவதாக'' என்று கூறி, அவனுக்கு முடிசூட்டினான்.

மிக விரைவிலே, வேளிர் குலத்து நங்கையாகிய தன் மனைவியுடனும் மற்றப் பரிவாரங்களுடனும், உறவினருடனும் காந்தமன் புறப்பட்டான். அவன் மனைவியுடன் வேளிர் குலத்துப் பெண்கள் பலரும், வீரர் பலரும் உடன் புறப்பட்டனர். காந்தமன் யாவருடனும், கப்பல் ஏறி, நகருக்கு அயலில் உள்ளதாகிய, கடல் நடுவே உள்ள சாந்திமத் தீவிற்குச் சென்றான். தீவை அடைந்ததும், அங்குள்ள பாறைகளையும், மரங்களையும் கொண்டு ஓர் அரண்மனையை உண்டாக்கிக் கொண்டான். தன் பரிவாரங்களுடன் அங்கேயே நாட் கணக்காகவும், மாதக் கணக்காகவும் இருந்துவந்தான். நாளடைவில், அந்தத்தீவு, ஒரு பெரிய அரண் அமைந்த அரண்மனையாகமாறியது. காந்தமனின் மனம் அந்தத் தீவிலே ஈடுபட்டது. களிப்போடு வாழ்ந்து வந்தான். தனக்கு, பரசுராமன் வரவை உணர்த்தி மறைந்திருக்கும்படி ஆக்ஞையிட்ட நகர்த் தெய்வமா




''என்னையா கேட்கிறாய்? பேதையே! நான் நாகநாட்டு வீரன்; இதோ இவள் நாகநாட்டு அரசிளங்குமரி நாககன்னிகை. இவளுக்கு உயிர்த் தோழன் நான். தெரிந்ததா? இனி நான் சொல்வதைக் கேள்!

கிய துர்க்காதேவிக்கு ஒரு கோயிலும் அங்கே உண்டாக்கி வழிபட்டான். அந்தத் தீவிலே மலையிடமெல்லாம், அழகிய மாளிகைகளை அமைத்தான். தீவினுள்ளே மாளிகையை ஒட்டி ஒரு சுனையும் பேரழகாக விளங்கியது. காந்தமன் அந்தத் தீவிலேயும் ஓர் ஆட்சியை உடையவனானான்.

## வேளிர் குல ஆட்சி

பல மாதங்கள் கடந்தன. பரசுராமன் காவிரிப்பட்டினத்தை அணுகி, அங்கே அரசாள்பவன் அரசகுலத்தினன் அல்ல என்று அறிந்து மீண்டு வேறு வழியே போய்விட்டான். அகத்தியர் பெருமகிழ்வுகொண்டார். தக்க தூதுவர்களை காந்தமன் இருந்த தீவுக்கு அனுப்பி, பரசுராமன் போய்விட்டதை உணர்த்தினார். காந்தமன் பேருவகை கொண்டான். காவிரிப்பட்டினம் போவதற்குக் குதூகலத்தோடு புறப்பட்டான். ஆனால் அவனுடன் வந்த வேளிர் கூட்டத்தினர் அங்கேயே இருப்பதாக அவனிடம் கூறிவிட்டனர்.

இயற்கையரண் அமைந்து பெரும் பொலிவுடன் விளங்கிய அந்தத் தீவை விட்டுப் பிரிய அவர்கள் விரும்பவில்லை. காந்தமன் அதற்கு உடம்பட்டான்.

''உங்கள் விருப்பம் போல் இங்கேயே வாழ்ந்திருங்கள். இந்தத்

தீவு, என் பெயரால் காந்தமத் தீவு என்று வழங்கட்டும். என் உயிர் தந்த செல்வியாகிய, துர்க்கா தேவியை நீங்கள் மறவாமல் நாள்தோறும் வழிபட்டு வருவீர்களாக. உங்கள் வம்சம் பெருகி இந்தத் தீவு உங்களுடையதாகவே விளங்கட்டும்'' என்று கூறி துர்க்காதேவியை வணங்கி விட்டு, தன் மனைவியுடன் கப்பலேறிக் காவிரிப் பட்டனத்தை அடைகிறான்.

அன்று தொடங்கி அந்தத் தீவுக்குக் காந்தமத் தீவு என்றும் சாந்திமத் தீவென்றும் பெயர் வழங்கியது. வேளிர் குலத்தவர்கள், அந்தச் சாந்திமத் தீவிலே வாழ்ந்து வரலாயினர். நாளடைவில் அவர்கள் கூட்டம் மிகுதியாயிற்று. அந்தத் தீவிலே தனியாட்சி செலுத்தினர் வேளிர் குலத்தினர். அந்தத் தீவைச் சார்ந்த இடமெல்லாம்-கடற் பக்கமெல்லாம் வேளிர்களின் ஆதிக்கத்திலே இருந்தது. கடல் வழியே, கப்பல் செலுத்தி அயல் நாடு செல்லும் வணிகர் முதலியவரை இடை மறித்துப் பொருள் பறிப்பதும், கொடாத வரைத் துன்புறுத்துவதும், சிறை செய்வதும் அவர்கள் தொழிலாகிவிட்டன. அவர்களை அடக்கவோ, எதிர்க்கவோ யாரும் முற்படவில்லை. இவ்விதம் அவர்களின் ஆதிக்கம் மேலோங்கி வந்தது.

## கடற் கள்வர் வேலை

அந்த வேளிர் வழியிலே, தோன்றினான் வீரைவேள் என்பவன். சாந்திமத் தீவிற்கு அவனே தலைவனாகவும் விளங்கினான். அவனும், தன் முன்னோர்களுடைய தொழிலை விடவில்லை. கடலிலே செல்லும் கப்பல்களை மறித்துப் பொருள் பறிக்கும் தொழிலை நன்கு அவன் நடத்தி வந்தான். கடற் கள்வர்! என்ற பெயர் பெற்ற வேளிர்க்கு அவன் தலைவனாகி அத்தொழிலை நடத்தி வந்தான். வழக்கம்போல் அவ் வீரைவேளின் ஆக்ஞைப்படியே அன்று விடியற் போதிலும், வேளிர் கூட்டம் கடலிலே தோணிகளைச் செலுத்தி ஆங்காங்கே திரிந்துகொண்டிருந்தது.

நிலவெறிக்கும் சமயம். வெண்மைப் பரப்பே கடலெங்கும் காணப்பட்டது. சாந்திமத் தீவை அடுத்தாற்போல் சென்றுகொண்டிருந்தன நாககன்னிகை முதலியவர்கள் ஏறி வந்த கப்பல்கள். கப்பல்களின் முகப்பிலே சிறிய விளக்கொளி தவழ்ந்தது. சிறிது தூரத்துக்கு அப்பால் செல்லும் அந்தக் கப்பல்களை வேளிர் கூட்டம் கண்டது. அவ்வளவிலே 'குபுக்' 'குபுக்' என்று வேளிரின் கப்பல்கள் அவற்றை நோக்கிப் பாய்ந்து சென்றன. நாகநாட்டை நோக்கிச் செல்லும் கப்பல்கள் யாவும் ஒன்றோடொன்று மோதும்படியாக, வேளிரின் கப்பல்கள் முன்னே சென்று மறித்து மோதின. மிகவேகமாகச் சென்றுகொண்டிருந்த நாகநாட்டுக் கப்பல்கள் தடைப்பட்டு நின்றன. அவற்றிற்கு முன்னே, மதிலெழுப்பியது போன்று வரிசையாகப் பல கப்பல்கள் சூழ்ந்து நின்றன. கப்பல்களின் தட்டிலே வீரர்கள் ஆயுதங்களோடு நின்றனர். 'ஓ' என்ற கூக்குரலுடன் வேளிர் ஆரவாரம் செய்தனர். நாகநாட்டு வீரர்களும் ஆயுதபாணிகளாய்ப் போர்க்கோலம் கொண்டு எழுந்து நின்றனர்.

## நீலன் உத்தரவு

நடுவிலே செல்லும் மரக்கலத்தில் இருந்த நீலன், அது நின்றதையும் பகைவர்களின் முற்றுகையையும் ஆரவாரத்தையும் கண்டதும் துணுக்குற்றான்.

''எதிர்த்து நில்லுங்கள். கடற் கள்வரை புகவிடாமல் தாக்குங்கள்'' என்று கூவினான் நீலன். அவன் கூக்குரலைக் கேட்ட நாககன்னிகை, உறக்கம் கலைந்து விழித்து, நிலைமையை உணர்ந்தாள். அதைக்கண்ட நீலன் பரபரப்போடு, ''நாககன்னிகை கந்தி, நீங்கள் இருந்த இடத்தை விட்டு அசையாதீர்கள், கள்வர் கூட்டம் நம்மைச் சுற்றிக்கொண்டிருக்கிறது'' என்று கூறினான். உடனே பின்புறமாக கப்பலைச் செலுத்தி வேறுபுறம்செல்லலாம் என்று கருதினான். பின்னே நின்ற கப்பல்களை விரைந்து கீழ்புறமாகச் செலுத்தும்படி கட்டளையிட்டான். அவன் சொன்ன அந்த கணமே, பின்புறமும் கள்வரின் கப்பல்கள் வளைத்துக் கொண்டன. வேளிர் வளைத்துக் கொள்ளும் சமயம் அஞ்சி நடுங்கினர் யாவரும்.

வேளிர் கூட்டம் பேராரவாரம் செய்தது, நாகநாட்டு வீரர்கள் போருக்கு ஆயத்தமாயிருப்பதைக்கண்டு, சற்றுத்தயங்கினர், அவர்கள். நாகநாட்டுக் கப்பல்களுக்குள் புகுந்து, பொருள்களைப் பறிப்பதற்கு முடியாதவர்களாய் வேறு யோசனை செய்து அச்சுறுத்தினர்.

''கப்பல்கள் யாவும் அப்படியே சாந்திமத்தீவை அடையவேண்டும். இல்லையேல், இதே இடத்தில் கடலில் யாவும் மூழ்கும்படி தாக்குவோம் இது எங்கள் தலைவன் ஆக்ஞை'' என்று கூவினர் வேளிர் வீரர்.

## நீலன் சொன்ன சமாதானம்

நீலன் அவ்வார்த்தையைக் கேட்டு மனம் கலங்கினான். 'போர் புரிந்தால், ஏதேனும் ஆபத்து நேருமே! இந்தக் கப்பலில் நாககன்னிகை இருக்கையில் எப்படி போர் செய்வது? ஒருகால் வேண்டுமென்றே கப்பலைக் கவிழ்த்தார்களானால் என் செய்வது? இவர்களுடன் சென்றால் என்ன நேருமோ? எதற்காக இவர்கள் நம்மைத் தடை செய்கிறார்கள்?' என்று கலங்கினான்.

வீரர்களே, நாங்கள் நாகநாடு போகிறோம். எங்களை நீங்கள் எதற்காக சாந்திமத்தீவுக்கு வரச் சொல்கிறீர்கள்? எங்களால் ஆகவேண்டியதுஒன்றுமில்லையே! வெறும் யாத்திரைக்காகச் சென்று வரும் எங்களை ஏன் மறிக்கின்றீர்கள்? உங்கள் தலைவன் எதற்காக எங்களைத்தடை செய்ய சொன்னான்! வீரர்களே, யாத்திரிகர்களாகிய எங்களை வீணாகத் தடை செய்யாமல் விட்டு விலகுங்கள். எங்களிடம் உங்களுக்கு வேண்டிய பொருள் மூட்டைகள் இல்லை'' என்று சமாதானமாகச் சொன்னான்.

அதைக்கேட்டு வீரர் கூட்டம் 'ஏ ஏ' என்று பெருநகை செய்து ஆரவாரம் செய்தது. ''ஓ நாகநாட்டு வீரர்களா நீங்கள்! மிகவும் நல்லது. அப்படியானால் உங்களிடம் வேண்டிய பொருள்கள் கிடைக்கும். உங்களை விட முடியாது; எங்கள் தலைவனிடம் நீங்கள் வந்தே ஆகவேண்டும்; இனி தயக்கம் செய்தால் கப்பல்களுக்குள் புகுந்து யாவரையும்

(26-ம் பக்கம்)

# ஸ்ரீ ஸத்யமூர்த்தியின் கடிதங்கள்

★

## நாடகம்

[காப்பிரைட்]

★

*கடவுள், மதம் இவை போன்ற விஷயங்கள் சற்று கடுமையானவை தான். ஸ்ரீமான் ஸத்தியமூர்த்தி தமது பெண்ணின் விருப்பப்படி அவைபற்றி 2, 3 கடிதங்கள் எழுதிய பின்னர் சற்று உல்லாசமாகவும், பொழுது போக்காகவும் இருக்கும் முறையில் ஓர் கடிதம் எழுதினார். 1941-ம் வருஷம் ஜூன் மாதம் 14-ந் தேதியன்று "நாடகம்" என்ற மகுடத்தில் அவர் எழுதிய ஆங்கிலக் கடிதத்தின் மொழி பெயர்ப்பு தான் கீழே பிரசுரமாகிறது:—*

**என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,**

கடவுள், மதம் இரண்டு பற்றியும் உனக்கு எழுதியிருந்தேன். இப்போது எழுதுவது நாடகத்தைப்பற்றி. ரொம்ப கடுமையாகவும், தீவிரமாகவும் உள்ள விஷயங்களைப்பற்றி எழுதிய கையோடு சற்று சில்லரையாகவுள்ள விஷயம் குறித்து எழுதுகிறேன். இது மாறுதலை உத்தேசித்து. நாடகத்துக்கும், தெய்வம், ஆலயம் இவற்றிற்கும் சம்பந்தம் உண்டு. தஞ்சாவூரில் இன்று கூட ஸ்ரீ பிரஹதீச்வரர் ஆலயத்தில் பிரதிவருஷமும் அவ்வூரைச்சேர்ந்த தாஸிகள் ஓர் நாடகத்தை நடிக்கின்றனர்.

வாழ்க்கை பலதரப்பட்டதாகவிருக்கிறது. நமது சகோதர சகோதரிகள் ருசியில்லாமலும், சுணக்கமாகவும் உள்ள இடங்களில் வசிக்கிறார்கள். சூழ்நிலை சரியில்லாததால், நாடகமேடைமீது வாழ்க்கையின் அம்சங்களை தத்ரூபமாக நடித்துக் காட்டுவதைப்பார்த்து சந்தோஷிக்க அவர்கள் எண்ணுகின்றனர். பூர்வீக இந்தியாவிலும், கிரீஸிலும் இடைக்காலத்தில் இங்கிலாந்து, ஐரோப்பா ஆகிய இடங்களிலும் நாடகங்கள் பிரசித்தமாக விளங்கின. அப்போது அவை எல்லாம் மதம், புராணம், அல்லது சரித்திரம் இவற்றைத் தழுவியதாக விருக்கும்.

அந்தக் காலத்தில் நாடகங்கள் எல்லாம் வெட்ட வெளியிலே நடைபெறும். அனைவரும் இலவசமாகப் போய்ப் பார்க்கலாம். சிலருக்கு மட்டும் விசேஷமாக அங்கே இடங்கள் போடப்பட்டிருக்கும். நாடகம் வெகு நேரம் வரையில் நடக்கும். சில சமயத்தில் இரவு பூராவுமே நடப்பதும் உண்டு. தென்னிந்தியாவில் கூடப்பாரேன். இப்பவும் கூட "மார்க்கண்டேயா", "ஹரிச்சந்திரா" போன்ற கதைகள் தெருக்கூத்துகளாக நடக்கின்றன. நாடகம் ராத்திரி 10 மணிக்கு ஆரம்பமாகும். விடிய விடிய, நடக்கும். காலை 6–மணிக்குத்தான் முடியும். நடிப்பு, காட்சிகள், உடுப்பு இவை எல்லாம் அவற்றில் ரொம்ப எளிய முறையிலிருக்கும். நாகரிகமாகவும் இராது. சிற்சில சந்தர்ப்பங்களில் இந்த நாடகங்களில் பாட்டுக்களும், நடிப்பும் தரமாயிருக்கின்றன.

நமது நாட்டு நாடகங்கள் ஒருபுறமிருக்கட்டும். கிரேக்க நாட்டு நாடகங்கள் மிக்க உயர்தரமானவை. அவற்றில் சில படிப்பதற்கு அற்புதமாயிருக்கின்றன. ரஷ்ய தேசத்து நாடகம் நன்றாகவிருக்குமாம்; ஜெர்மன் நாடகமான "பாஸ்ட்" என்பதும் அப்படியேதானாம். ஆனால் இவை

பற்றி எனக்கு ஏதும் தெரியாது. ஆங்கில நாடகங்களுக்குள் ரொம்ப பிராபல்யமானவை ஷேக்ஸ்பியர் எழுதியவைதான். சில நாடகங்கள் நடித்தால்தான் நன்ருக அனுபவிக்கமுடியும். இன்னும் சில படிக்கும்போதுதான் நன்கு ரஸிக்கமுடியும். ஆனுல் ஷேக்ஸ்பியர் எழுதியவையெல்லாம் படித்தாலும் சரி, நடித்தாலும் சரி ரொம்ப ஆனந்தமாயிருக்கும். இதே போலத்தான் சம்ஸ்கிருதத்தில் காளிதாஸன் எழுதிய நாடகங்களும். ஷேக்ஸ்பியர் நாடகங்களை எழுதியதோடுமட்டுமில்லே, நாடகமேடையில் தீவிரமாகப் பங்கும் எடுத்துக்கொண்டிருந்தார். அதனுல்தான் அவரது நாடகங்கள் அதி அற்புதமாயிருக்கின்றன.

இங்கிலாந்திலே தற்போதைய நாடகங்கள் ஒரு கதம்பம் மாதிரியிருக்கின்றன. தற்கால தீவிரப் பிரச்னேகள் சம்பந்தமாக ரொம்ப திறம்பட்ட முறையில் உள்ள நாடகங்கள் சில இருக்கின்றன. இன்னும் சில அம்மாதிரி இல்லாமலும் இருக்கின்றன. இதுபோன்ற நாடகங்கள் ஒன்று காதல் ரஸம் பொருந்தியனவாயிருக்கின்றன; அல்லது மட்டமான ஹாஸ்ய உணர்ச்சி கொண்டவையாயும் அமைந்திருக்கின்றன.

காளிதாஸைத் தவிர இன்னும் பல பிரபல சம்ஸ்கிருத நாடகாசிரியர்களும் உண்டு. பவபூதி, பாஸா, போன்ற சிறந்த நாடகாசிரியர்களிருந்திருக்கின்றனர். சம்ஸ்கிருதத்தில் பல பெரிய நாடகங்களிருக்கின்றன. தற்கால சமூகப்பிரச்னேகள் தவிர மற்ற சகல விஷயங்களேப்பற்றியும் அந்த நாடகங்கள் கூறுகின்றன. ஏன் தற்கால சமூகப் பிரச்னேகளேப்பற்றி அவற்றில் பிரஸ்தாபம் இல்லேயென்ருல் காரணம் வெளிப்படை. முழுக்க முழுக்க ஹாஸ்யகரமான நாடகங்கள் உட்பட பல நாடகங்கள் சம்ஸ்கிருதத்தில் உண்டு. இலக்கியத் துறையில் சம்ஸ்கிருத நாடகங்கள் மிக்க உயர்வான நிலேயில் இருந்தது. மிக்க கண்யமான, நாகரீகமான முறையில் சிருங்கார ரஸத்தைப்பற்றி, அவற்றில் எழுதப்பெற்றிருக்கின்றன. எனவே மிக உன்னதமான இலக்கியமாக அவை திகழ்கின்றன. எனக்குத்தெரிந்தவரை புராதன தமிழ் இலக்கியம் எந்த நாடகத்தையும் நமக்குச்செய்து வைத்திருப்பதாகத் தெரியவில்லே.

சென்ற 50 ஆண்டுகளாக நம் நாட்டில் நாடகம் நிலேபெற்று வந்திருக்கிறது. ஹிந்தி, உர்து, தமிழ், தெலுங்கு, வங்காளி, மராத்தி ஆகிய பாஷைகளில் அநேகம் சிறந்த நாடகங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. இவற்றில் சில வெகு உயர்தரமாகவிருக்கின்றன. இந்த நாடகங்களில் பல நாடெங்கும் நடிக்கப்பட்டிருக்கின்றன. இன்னும் நடிக்கவும் நடிக்கின்றனர். பலர் அவற்றைப்பார்த்தானந்திக்கின்றனர். இதிஹாஸங்கள், புராணங்கள்முதலியவற்றிலிருந்து பக்திநிறைந்த கட்டங்கள் நாடகங்களாக நடிக்கப்படுகின்றன. இன்னும் சில நாடகங்களுக்கு இந்திய தேச சரித்திர சம்பவங்கள் நாடகக் கட்டங்களாக அமைக்கப்பட்டிருக்கின்றன. தற்கால சமூகப் பிரச்னேகளேக் குறித்த நாடகங்கள் சொற்பம். நமக்காக நாம் ஒரு நாடக பாணியை வைத்துக்கொண்டு அதை அபிவிருத்திசெய்து வருகிருேம். காலஞ்சென்ற பெல்லாரி கிருஷ்ணமாச்சார்லு தெலுங்கில் பல நாடகங்கள் எழுதியுள்ளார். அதேபோல என் நண்பர் ஸ்ரீ பி. சம்பந்த முதலியார் தமிழில் நாடகங்கள் பல எழுதியிருக்கிருர். அவை நடிக்கப்படுகின்றன. இத்துறையில் அவர்கள் மகத்தான சேவை செய்திருக்கின்றனர். ஆனுல் அவர்கள் எழுதிய நாடகங்களில் பெரும்பான்மையும் மத சம்பந்தமானவை; புராணத்தைப்பற்றியவை, அல்லது காதல் ரஸமுள்ளவையாகவிருக்கின்றன. தற்கால வாழ்க்கையைப்பற்றியோ, நிலேமைகளேக் குறிப்பதாகவோ அந்நாடகங்கள் அமையவில்லே. மேலே சொன்ன நாடகங்கள் சிறந்தவை என்ருலும் அவை குறிப்பிட்ட ஒரு துறையில்தான் என்று சொல்லவேண்டும்.

தற்கால வாழ்க்கையையும், நிலேமைகளேயும் சித்தரித்துக் காட்டும்படி முக்கியமான பாஷைகளில் இந்திய நாடகங்கள் இன்னும் உருப்பெறவில்லே. தற்கால இந்தியாவில், சிக்கல்கள் மலிந்துள்ள வாழ்க்கை, பிரச்னேகள் இவற்றைப்பற்றியெல்லாம் சில நாடகாசிரியர்கள் நாடகங்கள் எழுதலாம். இதன் மூலம் அவர்கள் தமாஷாவுக்கு ஏற்பாடு செய்வதுடன் இந்தியாவுக்குப் போதனே செய்வதாகவும்இருக்கும். இதைப்பற்றி அடுத்த கடிதத்தில் மேலும் எழுதுகிறேன்.

[signature]

---

'சுதேசமித்திரன்' வாரப்பதிப்பு

## சந்தா விவரம்

### (முன்னதாகக் கட்டவேண்டும்)

இந்தியா, இலங்கை

| | ரூ. | அ. | | ரூ. | அ. |
|---|---|---|---|---|---|
| 1 வருடம் | 9 | 12 | 3 மாதம் | 2 | 12 |
| 6 மாதம் | 5 | 0 | தனிப்பிரதி | 0 | 3 |

வெளிநாடு ரூ. 19—8.

3 மாதத்திற்கு குறைந்து சந்தா ஒப்புக்கொள்ளப் படமாட்டாது.




(வ.ரா.)

## அத்தியாயம் 4

காசி யாத்திரை போன சம்பு சாஸ்திரிகளைப்பற்றி, நான்கு வருஷங்களாக, யாதொரு தகவலும் கிடைக்கவில்லை. காசி யாத்திரையை, அக்காலத்தில், பரலோக யாத்திரையாகவே, எண்ணிக் கொண்டிருந்தார்கள். காசிக்கு நேரான பாதை கிடையாது. சங்கீத வித்வான்கள், தங்கள் மனோதர்மப்படிக்கு பாடுவதைப் போல, பிரயாணிகள், தங்கள் மனம் போனவாறு, காட்டு மார்க்கமாக, ஒற்றையடியில், பாதையை முறித்துக் கொண்டு போவார்கள். கப்பல்களின் காபிதான்களுக்கு,வடக்கு காட்டும் கருவி உண்டு. இந்த பக்த பிரயாணிகளிடம் அதற்கு வழி ஏது? ஏதோ, வடக்கு திசையை நோக்கிச் செல்லுவார்கள். காசி வந்தாலும் வரும் அல்லது மத்தியில் பயங்கரமான காட்டு மிருகங்கள் வந்தாலும் வரும். யமன் இந்த ரூப்மாக வந்து கூப்பிடுகிறானுக்கும் என்று மனதைத் தேற்றிக் கொண்டு, பிரயாணிகள் இவைகளுக்கு அநேகமாக பலியாகி விடுவார்கள். காசி யாத்திரைக் கதைகள், இப்படித்தான் பெரும்பாலும் முடிகிறது வழக்கம்.

எனவே, யாதொரு தகவலும் சாஸ்திரிகளைப்பற்றி கிடைக்காததால், அவருடைய தர்ம பத்தினி சாவித்திரி அம்மாள், அவரைப் பற்றி நினைந்து நினைந்து கரைந்து, உடல் மெலிந்து போனாள். தான் சுமங்கலியா அமங்கலியா என்ற சந்தேகம் தான் பெரிதும் அவளை வாட்டி வந்தது. நெற்றியில் பொட்டைத் தவிர, சுமங்கலிக்குரிய ஏனையவைகளை அவள் அனுபவிக்க, மனம் கொள்ளவில்லை. பூவைத்துக் கொள்ளுவதில்லை; எண்ணெய் ஸ்னானத்தை அடியோடு மறந்து விட்டாள். தேர் திருவிழாக்களுக்குச் செல்லுவதில்லை. தான் உண்டு, வீடு உண்டு என்பதாக, வீட்டை விட்டு வெளியே போகவே இல்லை. தனக்கு, அநேகமாக வைதவ்யம் ஏற்பட்டு விட்டதாகவே எண்ணிக் கொண்டாள். மேலும், சத்புருஷனை வீட்டை விட்டு வெருட்டிய துர்க்குணி என்று ஊரார், தன்னைப்பற்றி அவதூறு பேசுவார்களோ என்று பயந்தே, அவள் வீட்டைவிட்டு வெளியேறுவதில்லை.

மூத்த பையன்கள் சம்பாதிப்பதைக் கொண்டும் தனது சகோதரர்கள் அலுக்காமல் அனுப்பி வந்த பொருள்களைக் கொண்டும், சாவித்திரி அம்மாளின் குடும்பம் நடந்து வந்தது. குடும்ப யோக க்ஷேமத்தைப் பற்றியே, அவளுடைய கவலை செல்லவில்லை. தம்பிசேஷன் அடிக்கடி வந்து, ஆறுதல் சொல்லி விட்டுப் போவார்.

இப்பொழுது சாம்புவுக்கு வயது பன்னிரண்டு. பிராயத்துக்கு மீறியே, அவன் வளர்ந்து கொண்டு போனான். ஆள்கட்டினது மாதிரி உயரம்; உயரத்துக்கு ஏற்ற பருமன். ஆனால் அவலக்ஷணமான பருமன் அல்ல. சபைக்குஏற்ற புருஷன் என்று சொல்லுவார்களே, அந்தமாதிரி, அவன் வளர்ந்து வந்தான். சண்டைக் கூட்டங்களில், சாம்பு இல்லாமல் இருக்கமாட்டான். சமாதானம் பேசுகிற இடத்திலும், அவன் எல்லோருக்கும் முன்னாலே இருப்பதைப் பார்க்கலாம். வாத்திமார்களுக்கு இவன் 'படு செல்வம்'; ஆனால், அவர்களுக்கு இவனாலே, தொந்திரவும் அதிகம். எந்தப் பரீக்ஷையிலும் சாம்பு, புலிப்பட்டணபாஷையில் 'பஸ்ட்' (முதல்). இப்படி படிப்பில் மிகவும் துடியாயிருந்த சாம்புவைப்பற்றி, சாவித்திரி அம்மாள் ஏகதேசம் கவலைப்பட்டாளே யொழிய அவளுடைய



தியானமெல்லாம் சம்பு சாஸ்திரிகளைப்பற்றிதான்.

சாம்பு பள்ளியில் மிகவும் குறும்பாகவே நடப்பான். பயம் என்பதே அவனுக்குத் தெரியவில்லை. பையன்களை கேலி செய்து உபத்திரவிப்பதும் வாத்திமார்களோடு சரளமான கிண்டல் செய்வதும் அவனது வழக்கமாகப் போய்விட்டது. விடுமுறைநாள் ஒன்று வந்தால், அதை நோட்டீஸாக எழுதி, வகுப்புக்கு வகுப்பில், அந்தந்த வாத்திமார் படிப்பார். ஒரு சமயம் பாதிரி ஒருவர் சாம்பு படித்து வந்த வகுப்புக்கு, இங்கிலீஷ் பாடம் சொல்லிக் கொடுத்து வந்தார். அவர் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்த நேரத்தில், வைகுண்ட ஏகாதசி விடுமுறைக்காக, நோட்டீஸ் வந்தது. நோட்டீஸ் இங்கிலீஷில் இருந்ததை பாதிரியார் ஆனந்தமாக வாசித்து முடித்தார். சின்னச் சாம்பு, களுக்கென்று சிரித்தான். வேறொன்றுக்காகவும் இல்லை, வைகுண்ட ஏகாதசி என்பதை பாதிரியார், வைகுண்ட ஏகதாசி என்று படித்து விட்டார். சாம்பு சிரிக்காமல் என்ன செய்வான்? சாம்பு வழி காட்டவே, வகுப்புப் பையன்கள் எல்லோரும் கலகலவென்று சிரித்து விட்டார்கள்.

பாதிரியார் விழித்தார். சிரிப்புக்கு காரணம் யாது என்று அவருக்குத் தெரியவில்லை. பாதிரியார் ஒன்றும் சொல்லாமலிருந்த பொழுதே, சாம்பு எழுந்திருந்து ஏகதாசி என்றால் ஒற்றைத் தேவடியாள் என்றும் அப்படிச் சொல்வது பிழை என்றும் ஏகாதசி என்று சொல்வதுதான் சரி என்றும் பாதிரியாரிடம் விளக்கிச் சொன்னான். பாதிரியார், இதற்காக, சாம்புவை கடிந்து கொள்ளாமல், வந்தனம் என்று சொல்லி, நன்றி பாராட்டினார்.

இதே பாதிரி இன்னொரு தடவை, வேறொரு பிழை செய்தார். பாதாள லோகம் நாக கன்னிகைகள் இருக்குமிடம் என்பதை இங்கிலீஷில் சொல்ல வேண்டும். பாதாள லோகம் என்ற பதம் பாதிரியாருக்கு மறந்து போய், அவர் 'தாபாள கோலம்' என்று சொன்னார். இந்தத் தடவையும், சாம்பு படீரென்று சிரித்து விட்டான். ஆனால் முன் போல, பாதிரியார் சாந்தமாக இருக்காமல், 'ஏ! குறும்புப் பிண்டமே! ஏன் காரணமில்லாமல் சிரிக்கிறாய்' என்று சாம்புவைப் பார்த்து, கோபித்துக் கொண்டார்.

'எவ்வளவு கோபித்துக்கொண்டாலும், 'தாபாள கோலம்,' பாதாள லோகமாக மாறிவிடாது என்று சாம்பு மிக்க அமைதியுடன் சொல்லவே, பாதிரியாருக்கு, விஷயம் உள்ளங்கை நெல்லிக்கனி போல புரிந்து விட்டது. சாம்புவின் தைரியத்தையும் ஹாஸ்ய வல்லமையையும் அவர் புகழ்ந்தார். மேலும், சாம்பு, இங்கிலீஷ் பேசுவதில், அபார சூரனாகி வருவதைப் பார்த்து, அவர் ஆச்சரியப்பட்டார்.

இங்கிலீஷ் பதப் பிரயோகம் சரியாகத் தெரியாமல், திமிங்கலத்தைப் போல பெரிய சொற்களை உபயோகப்படுத்தி, பையன்களை திகைக்க வைத்து, தங்கள்

(21-ம் பக்கம்)

# பிரபந்த நந்தவனம்

பி. ஸ்ரீ—

எத்தனை வகைப் பூக்கள், பூங் கொத்துகள், பூங் கொடிகள், பூ மரங்கள், இயற்கைப் பூம் பந்தல்கள்! அந்த மலர்களில் தான் எத்தனை வர்ணங்கள், வர்ணக் கலவைகள்; எத்தனை அழகுகள், அழகுக்கோலங்கள்; எத்தனை வித வாசனைகள், வாசனைக் கதம்பங்கள்! இடையிடையே அரும்புகள்—எவ்வளவு அழகாய் மலரக் கூடியன! ஒரே புஷ்பக் காடாகத் தோன்றுகிறது நந்தவனம் சில பகுதிகளிலே.

## கனவா, நனவா?

வேறு சில இடங்களிலே இடைவெளிகள்; பசும்புல்-தரைகள். அங்கங்கே இரத்தினங்கள் பச்சைக் கம்பளத்தின் மீது கொட்டிக்கிடப்பது போலவும், வாரி இறைத்திருப்பது போலவும்....ஆஹா, என்ன இன்பம்; என்ன அமோகமான செல்வம்! அப்படி உதிர்ந்து கிடக்கின்றன பூக்கள். உலாவி வரும்போதே என் மீதும் உதிர்ந்து கொண்டிருக்கின்றன, தேவர்கள் பொன் மழையும் இரத்தின மழையுமாய்ப் பொழிவது போலே!



சிலர் மாலைகட்டிக்கொண்டிருப்பதையும் காண்கிறேன். ஆம்; முடிமாலை, தொங்கல் மாலை, கிளி மாலை, வெற்றி மாலை என்றெல்லாம் எத்தனையோ தினுசுகள்;—முதல் தரம், இரண்டாம்தரம், மூன்றும் கீச்சிடும் கிளிகள்—பச்சைக் கிளிகள், பஞ்சவர்ணக் கிளிகள். தரம் என்றெல்லாம் எத்தனையோ தரங்கள்!

இந்த நந்தவனச் சோலையிலே வண்டுகள் பண் பாடுகின்றன பூக்களுக்கிடையே. குயில்கள் முதலான பறவைகளும் பாடிக் களிக்கின்றன. மயில்கள் ஆடுகின்றன. கிளிகள் பேசுகின்றன—சொன்னதைச் சொல்லும் கிளிப் பிள்ளைகள்,

இடையிடையே கல்பக விருட்சங்களையும், தெய்விக பரிமளம் வாய்ந்த பாரிஜாத மலர்களையும் காண்கிறேன். என்றும் வாடாத மலர்களையும், பச்சைப் பசுங் கொடிகளையும், தளிர்களையும் பார்க்கிறேன், சோலைக் குள்ளே போகப் போக. இதோ, என்ன அதிசயமலர்கள்? அதோ, என்ன அற்புத ஒளி? இது என்ன திவ்ய வாசனை?

இந்த நந்தவனம் கனவிலே கண்டதன்று. இது தான் ஆழ்வார்களின் ஞானப் பூங்காவனம். அவர்களுடைய ஞான ஒளிதான் இன்றும் குன்றாது வீசுகிறது, இந்தப் பிரபந்த நந்தவனத்திலே. அவர்களுடைய பக்திமலர்கள் தான்—பாமாலை

கள்தான்—அன்பு—மணமும் அருள்-மணமும் தெய்வ மணமும் கமழ்ந்து ஆனந்தத் தேன் சொரிகின்றன. எத்தனை நூற்றுண்டுகளாக எத்தனை மக்களுக்கு இந்தச் சோலையானது ஆறுதலும் பேரின்பமும் அளித்து வந்திருக்கிறது!

## பூவும் பக்தியும்

நந்தவனம் வளர்ப்பதில் நம்மவர்களுக்கு விசேஷ விருப்பம் உண்டு. கவிஞர்களும் கவித்வ உள்ளம் வாய்ந்தவர்களும் பூக்களையும் பூச்செடிகளை பூந்தோட்டங்களையும் காதலித்து வளர்ப்பது எந்த நாட்டிலும் வழக்கம் தான். ஆனல் நமது நாட்டிலோ நந்தவனங்கள் பக்தர்களையும் பக்தியுள்ளம் வாய்ந்தவர்களையும் கூட விசேஷமாக வசீகரித்து விட்டன. நந்தவனத்து மலர்களோடு மலர்களாய்ப் பக்தர்களுடைய உள்ளமும் மலர்ச்சி பெற்றது. அவர்களுடைய அன்பும் தளிர்களோடு தளிர்த்துத் தழைத்தது.

"ரொட்டி உடம்பை ரட்சிக்கிறது; புஷ்பமோ ஆனந்தமென்னும் உணவை அளித்து ஆத்மாவையே ரட்சிக்கிறது!" என்பது நபிநாயகமாகிய முகம்மது நபியின் அருள்மொழிகளில் ஒன்று. இந்த அருள்மொழியைச் சைவ வைஷ்ணவர்களாகிய இந்து பக்தர்கள் நபி நாயகத்தின் காலத்திற்கு முன்னமே அனுஷ்டானத்திற்குக்கொண்டு வந்து விட்டார்கள். முதலாழ்வார்களும் சில சிவநேசர்களும் நபி நாயகத்தின் காலத்திற்கு முன்னமே வாழ்ந்தவர்கள். நபி நாயகம் வாழ்ந்த ஏழாம் நூற்றுண்டோ தமிழ் நாட்டிலே பக்தி—மதங்களின் உச்ச நிலையாகிய ஒரு பெரும் பக்தி யுகமாக விளங்கியது.

அந்தப் பழைய காலங்களிலும் ஈச்வர ஆராதனைக்குப் புஷ்பம் ஒரு முக்கிய அம்சமாகவேயிருந்தது. எனவே கோவில் கட்டுவது எவ்வளவு அவசியமோ, அவ்வளவு அவசியமானது நந்தவனம் வளர்ப்பதும்—என்று நம் முன்னேர் தீர்மானித்தார்கள். நம்முடைய மதத்திலே, உலகத்தை



வெறுத்த துறவியும் காட்டை வெறுக்க வில்லை; ஒரு பூமரத்தடியிலே போய் உட்கார்ந்து தவம் புரிந்தார். இது ஆழ்வார்-நாயன்மார்களின் காலத்திற்கு முன்பு.

திருமங்கையாழ்வார் முதலான பக்தர்களோ காட்டுக்குப் போய் உடம்பை வாட்டிச் செய்யும் தவத்தைக் கண்டித்தார்கள்; நாட்டிலேயே காடு காடாக நந்தவனங்கள் வளர்த்துப் பூக்கொய்து பூமாலைகட்டிப் பகவானை அழகுசெய்து தரிசித்துப் பக்தி பண்ணவேண்டும்—என்றுர்கள்.

காதலர்கள் நந்தவனங்களிலே உலாவுவதும் சந்திப்பதும்



எந்த நாட்டிலும் வழக்கம் தான். பக்திக் காதல் வாய்ந்த ஆழ்வார்களும் நாயன்மார்களும்

—18-ம் பக்கம்

பாரதி புதுவைநிகழ்ச்சி

# சங்கீதமும் தாளமும்

★

**ஸ்ரீமதி தங்கம்மாள் பாரதி**

புதுவையில் ஓர் நாள் ஸங்கீத வகுப்பு நடந்துகொண்டிருந்தது. அந்த நாளில் பெண்கள் தாளம் போட்டுக்கொண்டு பாடுவது அபூர்வம். எல்லோருக்கும் தாளத்தோடு பாட வராது. சிலர் நல்ல முறைப்படி சங்கீதம் கற்றிருப்பார்கள். ஆனால் எங்கள் வீட்டில் தாளத்தோடுதான் பாட்டு நடக்கும். தாளம் தப்பவிட்டால் தந்தையார் அசாத்யமாகக் கோபித்துகொள்வார். வாத்யார் பிரமராய அய்யர் என்று தந்தையாரால் புனை பெயரிடப்பட்டு அன்புடன் மதிக்கப்படும் அன்பர். நா. சுப்பிரமணிய அய்யர் எங்களோடு அடிக்கடி வந்து மிருதங்கம் வாசித்து எங்கள் கச்சேரியில் உற்சாகமூட்டுவார். அவரது தம்பியார் ஸ்ரீ ஸ்வாமிநாதய்யரும், மிருதங்கம், கஞ்சிரா, ஹார்மோனியம் இவைகளை வாசிப்பார். புதிதாகப் புனையப்பெற்ற கீர்த்தனங்களைத் தந்தையார் அபிநயத்துடன் பாட, வாத்யார் சுப்பிரமணிய அய்யர் மிருதங்கம் வாசிக்கவும் கேட்டவர்கள் நாம் இருக்குமிடம் பூலோகம் என்பதையே மறந்து, திருக்கைலாயத்தில் ருத்ர நடனமும், நந்திகேசுவரர் மிருதங்கமும் கேட்பதாகவே எண்ணி விடுவார்கள். அன்று வாத்தியார் வரவில்லை. நாங்கள் ஐந்தாறு பெண்களும் தந்தையாரின் சிஷ்யர்களில் சிலரும் பாட உட்கார்ந்தோம். தியாகராஜ ஸ்வாமிகளின் கிருதிகளில் தந்தையாருக்கு அளவற்ற பக்தி. அவரது கீர்த்தனைகளிலுள்ள, பாவத்தையும் ரஞ்சகமான தன்மையையும் மிகமிகப் புகழ்வார். அன்று "ராமபக்தி ஸாம்ராஜ்ய" என்ற கீர்த்தனையைப் பாட ஆரம்பித்தோம். அந்தப் பாட்டு விசமத்தில் எடுப்பானபடியால் எங்களுக்கெல்லாம் சற்று கஷ்டமாய்த்தானிருந்தது. தாள ஞானமே இல்லாத நண்பர் ஒருவர் எங்களில் உண்டு. அவருக்கு சங்கீதம் கற்றுக்கொள்ள ரொம்ப ஆசை. அவரும் பாட ஆரம்பித்தார். "வருந்தினால் வாராததொன்றில்லை" அதனால் நீயும் பாட முயன்றால் சிறிது நேரத்தில் வந்து விடும் என்று தந்தையார் அவரை ஊக்கமுண்டாக்கிப் பாடச் செய்தார். ஆனால் சங்கீதமல்லவா? எவ்வளவு நாள் உழைப்புக்குப் பின் பயன் கொடுக்கக் கூடிய கலை! அவருக்குப் பாட்டை ஆரம்பிக்கவே முடியவில்லை. உடனே தந்தையார் தானே அருகிலுட்கார்ந்து சொல்லிக் கொடுக்க ஆரம்பித்தார். வரவே இல்லை........ராம பக்தி என்பதற்குப் பதிலாக இராம பக்தி என்றால் தான் அவருக்குக் கொஞ்சம் லகுவாகப் பாட முடிந்தது. தந்தை இராம பக்தி சரிதான். 'ஸாம்ராஜ்யம், எப்படி ஐயா அதற்கு என்ன எழுத்தைச் சேர்க்கப் போகிறீர்? அஸாம்ராஜ்யம் என்றா? என்று கேட்டுத் தந்தையார் சிரித்தார். நண்பர் சிரமப்பட்டுப் பார்த்தார் முடியவில்லை. தந்தை அதைப் பார்த்து, தம்பி! நீ எதை வேண்டுமானாலும் சொல்லு" இராம பக்தி அசாம் ராஜ்யத்தில் என்று வேண்டுமானாலும் பாடு. ஆனால் தாளத்தை மட்டும் கூளமாக்கிவிடாதே என்றார். நண்

பர் யாவரும் நகை வெள்ளத்தில் சில நிமிஷங்கள் ஆழ்ந்திருந்தார்கள்.

## 'பாப்பா'வின் பதில்

புதுவையில் தான் தந்தையார் எழுத்து வேலை அதிகம் பார்த்தார். "நமக்குத் தொழில் கவிதை; நாட்டுக்கு உழைத்தல்; இமைப்பொழுதும் சோராதிருத்தல்" என்ற விரதங் கொண்டிருந்தார்.

நான் 'இந்தப் பாட்டுப் பொருள் விளங்கவில்லை. இப்படி நாட்டிற்குழைத்துக்கொண்டிருந்தால் நம் சொந்த வீட்டு வேலையை யார் பார்ப்பார்கள் அப்பா?" என்றேன்.

"உமைக்கினிய மைந்தன் கணநாதன் நங்குடியை வாழ்விப்பான் சிந்தையேயிம்மூன்றுஞ் செய்" என்றார்.

"அப்படியானால் பிள்ளையார் தான் நம்ம வீட்டு மானேஜர்" என்று நாங்கள் எல்லோரும் சிரித்தோம்.

என் தங்கை குழந்தைப் பருவத்திலிருந்தே சூடிகையாயிருப்பாள். "கொண்டவன் குறிப்பறிந்து நடப்பவளே மனைவி" என்றார் திருவள்ளுவர். எல்லார் மனக் குறிப்பும் அறிய வேண்டும் என்பார் தந்தை. எங்கள் வீட்டில் நாங்கள் சமாசாரங்களை ஒருவருக்கொருவர் சொல்லிக்கொள்ளமாட்டோம். மனத்தை அறிந்து சமயத்திற்கேற்ப நடக்க வேண்டும் என்பது எங்கள் வீட்டு விதி. தந்தை உற்சாகமாயிருக்கும் சமயத்தில் அவரிடம் செல்வோம். மற்ற சமயம் ஓரிடத்தில் அமர்ந்து விளையாட்டிலோ, படிப்பிலோ கவனமாயிருப்போம். காலையில் எழுந்து தபால்ஆபீஸிற்குச் சென்று பத்திரிகைகளை வாங்கித் தந்தையாருக்கு அளிப்பது; மாலை அவர் எழுதும் கட்டுரை, வியாசம் முதலியவற்றைத் தபாலுக்கு அனுப்புவது இவைகளும் எங்கள் வேலைதான்.

ஒரு நாள் மாலை தபாலாபீஸ் செல்லும் பொழுது யாரோ ஒருவன் இடைமறித்து அன்பான குரலில் "பாப்பா, அந்தக் கடிதத்தை இப்படிக் கொடம்மா-பார்த்து விட்டுக் கொடுக்கிறேன் என்றான். பாப்பா "கொடுக்க முடியாது" என்றாள். அவன் புஞ்சிரிப்போடு "சரி. வேண்டாம் உன் பேரென்ன சொல்லம்மா. அந்தக் கடிதம் எந்தூருக்கு எழுதியிருக்கிறார்? யாருக்கு எழுதியிருக்கிறார்?" என்று கேட்டான். பாப்பா கோபத்தோடு "அநாவசியமான கேள்வி கேட்காதே!" "சொல்லமுடியாது" என்றாள். அவன் மறுபடியும் "உன் பேரை மட்டும் சொல்லு" பாப்பா வெறுப்புக் கலந்த பார்வையுடன் "அவசியமில்லை; மாட்டேன்" என்றாள்.

அவன் கோபத்தோடு "குழந்தே! இதோ பார் உன்னைத் தூக்கிக் கொண்டு போய் விடுவேன்"

பாப்பா இடி போன்ற குரலில் "அடே! என்ன சொன்னாய்? என் உடம்பில் தமிழ் நாட்டு மறவனது இரத்தம் ஓடுகிறது; என்னைத் தொடக்கூட உன்னால் முடியாது" என்று கூறி விரைவாக நடந்தாள்.

தபாலாபீசும் இதற்குள் சமீபித்து விட்டது. குழந்தையின் வார்த்தைகளைக் கேட்டு அவன் திகைத்துப் போனான். அசையாமல் நாங்கள் போவதைப் பார்த்துக்கொண்டு நின்றான். பின்பு வீட்டிற்குப் போய்த் தந்தையாரிடம் இதைத் தெரிவித்தோம். அவர் சந்தோஷத்தினால் பூரித்துப் போனார் பின்பு "இப்படித்தான் செய்ய வேண்டும். சமயோசிதமாக நடந்தால் எல்லா ஆபத்தும் விலகிப் போகும்.

துன்பம் நெருங்கி
வந்த போதும்—நாம்
சோர்ந்துவிடலாகாது
பாப்பா.
அன்பு மிகுந்த தெய்வ
முண்டு—துன்பம்
அத்தனையும் போக்கிவிடும்
பாப்பா.

என்று கூறிவிட்டு குழந்தைகளே! நீங்கள் கூறியபடி நமது மானேஜர் கணநாதன் உங்களைக் காப்பாற்றுவார் என்றார்.

---



### அட்டைப் படம்



ஸ்ரீ மங்கள பாலகான சபையார் இப்போது சென்னையில் நடித்து வரும் 'லக்ஷ்மிகாந்தம்' நாடகத்தில் கதாநாயகி ஹம்ஸாவாகத் தோன்றும் ஸ்ரீ கே. ஆர். கிருஷ்ணன்.

## பிரபந்த நந்தவனம்

(14-ம் பக்கத்தொடர்ச்சி)

நந்தவனங்களைக் காதலித்தார்கள். இந்தப் பக்தர்களெல்லாம்—முக்கியமாக, ஆழ்வார்கள்—தங்களைக் காதலிகளாகவே கருதிப் பகவானையே காதலனாகக் கொண்டார்கள். இவர்களும் தங்கள் தெய்வக் காதலனை நந்தவனத்திலே சந்தித்தார்கள்!—என்று கருதுவது பொருத்தம்தான்.

பூந் தோட்டத்தைக் கண்டதும் குழந்தைகளுடைய குதூகலத்தைத்தான் பாருங்கள். அங்கும் இங்கும் குதித்து ஓடும் அந்தக் குழந்தைகளின் ஆனந்தம் நமது நாட்டிலே பக்தர்களின் உள்ளத்திலும் ஏற்பட்டது, பூக்காடாகிய நந்தவனத்தைக் கண்ணுற்றதும் பூ, குழந்தை, தெய்வம், பக்தன்—என்ன நெருங்கிய உறவு!

## பெரிய, அழகிய, அதிசய நந்தவனம்

பழைய காலத்துப் பக்தர்கள் பயிர் செய்த அந்த நந்தவனங்களெல்லாம் அழிந்து போய் விட்டன. ஆனால் அவர்களுடைய பிரபந்தங்களாகிய நந்தவனம் இன்றும் அழகு குன்றுமல் இருக்கிறது. இது நந்தவனங்களில் எல்லாம் அழகிய நந்தவனம், பெரிய நந்தவனம், அதிசயமான நந்தவனம்.

தற்கால உலகத்திலே பெரிய நந்தவனங்களைப் பார்க்க விரும்பினால் அத்லாந்திக் மகா சமுத்திரத்திற்கு அப்பால் உள்ள நாடுகளுக்குப் போக வேண்டும் என்கிறார்கள். அமெரிக்காவிலே ஐயாயிரம் சதுர மைல் உள்ள நந்தவனம் இருக்கிறதாம். லண்டன்மா நகரத்திலும் பெரிய நந்தவனம் உண்டு. ஆனால் பல நூற்றுண்டுகளாக எத்தனையோ கோடி மக்களுக்கு ஆறுதலும் ஆனந்தமும் அளித்து வந்த பிரபந்த நந்தவனத்தைக் காட்டிலும் பெரியதொரு நந்தவனம் இருக்க முடியுமா?

உலகிலே சிறந்த அழகு வாய்ந்த நந்தவனம் எங்கே இருக்கிறது? கலிபோர்னியாவில் அதிக உயரமான மரங்களோடும், இரண்டாயிரம் அடி உயரமுள்ள குன்றுகளோடும், நீரருவிகளோடும், ஓர் அழகான நந்தவனம் இருக்கிறதாம்.

நியூஜீலந்திலே இயற்கை அழகு மிகுந்த ஒரு நந்தவனத்தை எத்தனையோ யாத்திரிகர்கள் போய்ப் பார்த்து வருகிறார்களாம். நமது நாட்டிலே முகலாயர் காலத்திலும் உலகப் பிரசித்திபெற்ற அழகு வாய்ந்த நந்தவனங்கள் இருந்தன. ஜஹாங்கீர் சக்கரவர்த்தி தன் காதலி நூர்ஜஹானுக்காகக் காஷ்மீர் தேசத்தில் பேரழகு வாய்ந்த உத்யான வனங்கள் அமைத்து வைத்தானும். ஆனால் எந்த நந்தவனத்திலே தான் பிரபந்த நந்தவனத்தின் தெய்விக அழகுகளைப் பார்க்க முடியும்?

காதலால் நந்தவனங்களையும் பூந்தோட்டங்களையும் அற்புதமாக அமைக்க முயன்ற சக்கரவர்த்திகள், ஜஹாங்கீர் காலத்திற்கு முன்பும் இருந்தார்கள். பாபிலோன் சக்கரவர்த்தி ஒருவன் தன் ஆருயிர்க் காதலிக்காக அமைத்த நந்தவனம், ஜஹாங்கீர் நூர்ஜஹானுக்காக அமைத்த உத்யான வனங்களையும் வென்றுவிட்டது, அழகிலும் பெருமையிலும்.

மேலே சொன்ன பாபிலோன் சக்கரவர்த்தியின் காதலி மலை நாட்டிலிருந்து வந்தவள். பாபிலோன் ஒரு சமவெளியான பிரதேசமானதால் "இயற்கைஅழகை அனுபவிக்க முடியவில்லையே!" என்று ஏங்கிப் போனளாம். அவளுக்காகச் சக்கரவர்த்தி அமைத்த பூந்தோட்டம் மேடும் பள்ளமுமாய் மலைப்பிரதேசம் போல் இருந்ததாம்; உப்பரிகையின் மேல் உப்பரிகையாக அமைக்கப்பட்டதாம், மேலும் கீழுமாய். ஒவ்வொரு உப்பரிகையிலும் பல நிறப் பூக்களோடு கூடிய செடிகள், கொடிகள், மரங்கள்!

இத்தகைய அதிசயமான பாபிலோன் - நந்தவனத்தையும் வென்று விடுகிறது ஆழ்வார்களின் பிரபந்த நந்தவனம்—



என்று தைரியமாகச் சொல்லலாம். பாபிலோன்—சமவெளிகளைப் பார்த்து அலுத்துப் போன ராணியின் கண்கள், காதலன் இயற்றிய நந்தவனத்தைக் கண்டு எவ்வளவோ

ஆனந்தம் அடைந்திருக்க வேண்டும்! ஆனால் அந்த ஆனந்தம் தான் ஈடாகுமா, லௌகிகக் கவலைகளால் அலுத்துப் போன உள்ளம் ஆழ்வார்களின் கவிதைப் பூஞ்சோலையிலே அனுபவிக்கும் பேரின்பத்திற்கு?

பாபிலோன்—நந்தவனத்தின் மேல்—உப்பரிகையின் உயரம் முன்னூறு அடி என்று நண்பர் திரு. அப்புஸ்வாமி தமது "அற்புதஉலகம்" என்ற புஸ்தகத்தில் ஆச்சரியப்பட்டுக் கொண்டே எழுதிவைத்திருக்கிறார். இந்தப் பிரபந்த நந்தவனமும் உப்பரிகை மேல் உப்பரிகையாகவே ஆழ்வார்களால் ஆக்கப்பட்டிருக்கிறது. மேல்—உப்பரிகையை நிர்மாணம் செய்த அற்புதச் சிற்பிக்கு 'நம்மாழ்வார்' என்று பெயர். இந்த உப்பரிகையின் உயரத்தை அடிக் கணக்கில் சொல்லமுடியுமா? மைல் கணக்கிலேதான் வரையறுத்துச் சொல்லமுடியுமா? இந்த ஆச்சரியமான நந்தவனத்திலே கீழ்-உப்பரிகை இந்தப் பூமிதான்-நமது வாழ்க்கைதான். மேல்—உப்பரிகையோ தெய்வ வாழ்க்கை—பரமானந்தமான பரம பதம்தான்!

நந்தவனமோ, பூந்தோட்டமோ வளர்ப்பதும் ஒரு கலை. தற்கால இந்தியாவிலும் வசதியுள்ளவர்கள்—சக்தியுள்ளவர்கள்—அழகான பூந்தோட்டங்கள், பூங்காவனங்கள் அமைத்து வருகிறார்கள். இலக்கியத் துறையிலும்-பக்தி துறையிலும் கூட—நாம் புதிய புதிய சோலைகள், பூந்தோட்டங்கள் அமைத்துக்கொள்ள வேண்டியது தான். ரவீந்திரநாத தாகுர் இயற்றிய 'கீதாஞ்சலி' பக்தியும் கவிதையும் கலந்த ஒரு புதிய பூஞ்சோலை. எனினும் ஆழ்வார்கள் பக்தியையும் கவிதையையும் ஆச்சரியமாகக் கலந்து இயற்றிய அந்த நந்தவனத்தையும் நாம் பயன்படுத்திக் கொள்ள வேண்டியது தான்.

அவர்களைப்போல் நந்தவனம் வளர்க்க இந் நாளிலே பக்தியுமில்லை, சக்தியுமில்லை! ஆனால் அந்த நந்தவனத்தை அனுபவிப்பதற்காவது வேலைத் தொந்தரவுகளுக்கிடையே அவகாசம் ஏற்படுத்திக் கொள்ள வேண்டாமா?

—

# சின்னச் சாம்பு

*(12-ம் பக்கத் தொடர்ச்சி)*

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

புலமையைக் காண்பிக்கப் பார்க்கும் வாத்திமார்களை சாம்பு கண்ணில் விரலைக் கொடுத்து ஆட்டி விடுவான். அவர்கள் பேசும் அபத்தமான இங்கிலீஷை, நாருக்காக, சல்லி சல்லியாகப் பிய்த்து விடுவான். பாவனை பாண்டித்தியத்தை காண்பிக்க முயலும் அசட்டு வாத்திமார்கள், சாம்புவின் கையில் அகப்பட்டுத் தவித்துப் போவார்கள்.

சாஸ்திரிகளின் குடும்பத்தார், பரம்பரையாக, வடமொழியில் பற்றுக் கொண்டவர்கள். என்றாலும் சாம்பு அதற்கு விலக்கு. பள்ளியில், அவன் ஸம்ஸ்கிருதம் கற்றுக் கொள்ளாமல் தமிழைப் படித்தான். தமிழ்ப் பண்டிதருக்கு, சாம்புவைக் கண்டால் கிலி. துரைக்கு பிடித்த பையன் என்று அவனிடம் அவருக்கு ரொம்ப பயம். சந்தி பிரிக்காமல் தமிழ்ப் பாட்டுகளை பண்டிதர் படித்தால், 'ஐயா! ஏதுக்காக, ஐயா, மந்திரம் ஓதுகிறீர்கள்? நீங்கள் படிக்கிற தமிழைக் காட்டிலும், துரை பேசுகிற இங்கிலீஷ் கூட புரிகிறதே! தமிழ் புரிந்தால் ஆபத்து என்று உங்கள் எண்ணமா' என்று சாம்பு அடுக்கிக் கொண்டே போவான்.

துரை பேசுகிற இங்கிலீஷ் என்பதில், துரை என்ற சொல்லைக் கேட்டவுடனே, தமிழ் அய்யா வெலவெலத்துப் போவார். 'துரையின் ஆங்கிலப் புலமையை, உமது வாயினின்றும் கேட்டு, யாம் பெரிதும் மகிழ்வுறுகின்றோம், நன்று, நன்று' என்று சொல்லி, பண்டிதர், சாம்புவை சமாதானப்படுத்தப் பார்ப்பார்.

மொத்தத்தில், சாம்பு எல்லோர் வாயிலும் புகுந்து புறப்படும் பேர்வழி ஆகிவிட்டான். அவனுடைய மூர்த்தி சிறிதல்ல; கீர்த்தியும் வளர்ந்துகொண்டே வந்தது. சாம்புவின் பாதிரி பள்ளிப் படிப்புக்காக, அவனுடைய குடும்பத்தாருக்கு, யாதொரு செலவும் இல்லை. சம்பளம் கிடையாது. புஸ்தகங்களை பெரிய துரை வாங்கிக் கொடுத்து விடுவார். பெரிய துரைக்கு, சாம்புவின் வயதில் ஒரு பெண். அவளுக்கு ரோஸ் என்று பெயர். உள்ளபடியே, அவள் ரோஜாப் பூவைப்போலவே இருக்கிறாள் என்று சாம்பு, தனது தோழர்களிடம் வர்ணிப்பான். பெரிய துரை பங்களாவில், சாம்புவும் ரோஸும் பேசுவதைப் பார்த்தால், காட்டாற்று வெள்ளம் போல இருக்கும். துரையும் அவரது மனைவியும் இந்த வேடிக்கையைப் பார்த்து, ஒருவருக்கொருவர் ஜாடை செய்து கொண்டு மௌனமாகச் சிரிப்பார்கள்.

இவ்வாறாக, காலம் போய்க் கொண்டிருந்தது. சின்னச் சாம்புவுக்கு, உடன் அடுத்த பெரிய சகோதரி, பதினெட்டு மாதத்துக்கு மூத்தவள். அவளுக்கு நாகம்மாள் என்று பெயர். நாகம்மாளுக்கு சுமார் ஒன்பதரை வயதில் கலியாணம் ஆயிற்று. சதுஷ் சாஸ்திர வித்பன்னர் என்றும் வேதக்கட்டி என்றும் பெயர் பெற்று விளங்கிய, சிவ பூஜா துரந்தரரான சுவேதாரண்யம் மார்க்கபந்து தீக்ஷிதரின் ஏக

புத்திரனை அக்ஷயலிங்கத்துக்கு, சம்பு சாஸ்திரிகள், தமது கடைசி புதல்வியான நாகம்மாளை பாணிக் கிரகணம் செய்து கொடுத்தார்.

கலியாண காலத்தில், வதுவரர்கள், ஒருவர் மற்றவருக்காகவே, பிரம்மாவால் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறார்கள் என்று எல்லாப் பொருத்தங்களையும் பார்த்த நிமித்திகர்களும் ஜோஸியர்களும் வெகு உற்சாகத்தோடு சொன்னார்கள். ரதி, மன்மதனைப்போல இருக்கிறார்கள் என்று ஊர்ப் பெண்டுகள் வாழ்த்தினார்கள். நாகம்மாள் நல்ல அழகு; அக்ஷய லிங்கமோ அதற்கு மேலே. எனவே, ஊரார், எப்படி வாழ்த்தாமல் இருக்கமுடியும்?

ரதியும் மன்மதனும் புராணத்திலேயே, வெகு காலம் சேர்ந்திருக்க முடியவில்லையே! பூலோகத்தில் மட்டும் சேர்ந்திருக்க முடியுமா? திடீரென்று, அக்ஷய லிங்கத்துக்கு, கப வாத சுரம் கண்டது. மார்க்கபந்து தீக்ஷிதர் வேண்டிக் கொள்ளாத கோயில்கள் இல்லை; பிரார்த்தனை செய்து கொள்ளாத மூர்த்திகள் பாக்கியில்லை. கந்தனது திவ்ய க்ஷேத்திரங்கள் எல்லாவற்றிற்கும் காவடி எடுத்துக்கொண்டு வருவதாக சங்கல்பம் செய்து கொண்டார்.

ஆனால், 'போற்றினும் போகாத, பொருள் கொடுத்தும் போகாத' அந்தப்பாவி யமன் தீக்ஷிதரின் பிரார்த்தனைக்கு பயப்படவில்லை; நாகம்மாளின் அழகையும் கவனிக்கவில்லை. உலகத்தாரின் பழியை லக்ஷியம் செய்யவும் இல்லை. அக்ஷய லிங்கத்தின் உயிரை, யமபுரிக்குக் கொண்டு போய்ச் சேர்த்துவிட்டான். பாவம்! நாகம்மாளுக்கு அந்த வயதில் என்ன தெரியும்? தான் விதவையாகிவிட்டாள் என்றால் இன்னது என்று அவளுக்குத் தெரியுமா?

நாகம்மாளுக்கு நேர்ந்த விபத்துச் செய்தியை கேட்ட சாவித்திரி அம்மாள் அப்படியே மெய்ம் மறந்து போனாள். செய்வது இன்னதென்று தெரியவில்லை. வருந்தினாள்; புலம்பினாள்; வாய் விட்டு அழுதாள். என்ன செய்தும் என்ன ஆகப்போகிறது? நாகம்மாள் கைம்பெண் ஆகிவிட்டாள். அதை, இனிமேல் அழிக்க முடியுமா? தனக்காக, ஏற்கனவே விதவையைப் போல இருந்த சாவித்திரி அம்மாள், இப்பொழுது தனது அழகுப் பெண் நாகம்மாளுக்காகவும் விதவையானாள்! இரட்டிப்பு வைதவ்யம்! வீட்டை விட்டு வெளியே செல்லுவதே இல்லை. யார் முகத்திலும் விழிப்பதுமில்லை.

சாவித்திரி அம்மாளின் நடவடிக்கை, சாம்புவுக்கு அர்த்தமாகவில்லை. நாகம்மாளுக்கும் சரியாகப்புரியவில்லை. அவள் வீட்டுக்கு வெளியே போவதை நிறுத்திக்கொள்ளவில்லை. வைதவ்யத்தைப்பற்றி அதிகமாக ஒன்றும் தெரியாததால், அவள் தனது பழைய நடமாட்டம் எதிலும் மாறுதல் செய்து கொள்ளவில்லை. சாவித்திரி அம்மாளும் இதைப் பற்றி அவளிடம் எதுவும் பிரஸ்தாபிக்கவில்லை. ஆனால், தம்பி சேஷன் வரும்பொழுதெல்லாம் இருவரும் சேர்ந்து, ஏதேதோ பேசிக்கொண்டு, கண்ணீர் வடிப்பார்கள்.

அந்த சந்தர்ப்பங்களில், நாகம்மாளாவது சாம்புவாவது, அவர்கள் இருக்கும் இடத்துக்குப் போவதே இல்லை.

(தொடரும்.)




காதல் நிரம்பிய உள்ளத்திலே தான் செய்யும் எல்லாக் காரியங்களும் தன் காதலுக்கு உரியவர்களுக்கு உபகாரமாக இருக்க வேண்டுமென்ற எண்ணமே எழுகிறது. காதலன் தன் காதலியின் நன்மையையும் அவள் உள்ளம் களித்து இன்புற வேண்டுமென்பதையுமே கருதி முயற்சிகளை மேற்கொள்கிறான். அவளோ தான் செய்யும் காரியங்கள் எல்லாவற்றிற்கும் தன் காதலனது நன்மையையே லக்ஷ்யமாகக் கொண்டிருக்கிறாள். அவள் தன்னை அழகு செய்து கொள்வதுகூட அவளுக்காக அல்ல; பிறர் கண்டு பாராட்டவேண்டும் என்பதற்காகவும் அல்ல, தன் இயற்கை அழகெல்லாம் யாருக்கு உரியதோ அந்த உயிர்க் காதலன் கண்டு களித்து இன்புற வேண்டும் என்பதற்காகவே அவள் தன்னை அலங்கரித்துக் கொள்கிறாள்; ஆடை உடுத்துக் கொள்கிறாள்; அணியும் அணிகிறாள், எல்லாம் அவன் திருப்தியை நினைந்துதான்.

மாலைக்காலத்தில்தான் மனிதன் ஓய்வு பெறுகிறான். செய்கின்ற தொழிலில் ஈடுபட்டு பகல் முழுதும் உழைத்துவிட்டு 'அப்பாடி!, என்று வீட்டுக்குச் செல்கிறான். அங்கே வீட்டுத் தெய்வமாகிய மனைவி அலங்காரஞ் செய்துகொண்டு இன்முகமும் புன்னகையும் பூத்து அவனை வரவேற்கிறாள். அப்பொழுது அவனுக்கு எத்தனை மகிழ்ச்சி உண்டாகிறது! உழைப்பினால் ஏற்பட்ட சிரமம் அவ்வளவும் மறந்து போகிறது.

# மலரும் உள்ளமும்



(கி. வா. ஜகந்நாதன்)

எல்லாம் அந்தப் புன்னகையின் மோகனத் தன்மையினால்.

அவளும் அவனது வருகையினாலே அடையும் இன்பம் சொல்லத்தரமா? காலையில் உணவு உண்டு வேலைக்குப் போனவன் மாலையிலே களைத்துப் போய் வருகிறானே, அவனுக்கு இன்முகம் காட்டி ஆறுதல் செய்ய வேண்டுமென்று எண்ணி அவள் அவனை வரவேற்பதில்லை. சூரியன் வருவதும் தாமரை மலர்வதும் இயற்கை நியதி. அதுபோல அவன் வரவே அவள் முகம் மலர்கிறாள். அவன் இல்லாத வீட்டிலே அவளுக்கு வேலை இருக்கிறது; வீட்டைப் பாதுகாக்கும் வேலை இருக்கிறது. அவன் இருக்கும்பொழுதோ இன்பம் இருக்கிறது. அவன் தனக்கு அருகிலே இருக்கிறான் என்ற நினைப்பு ஒன்றே அவளுக்கு எத்தனையோ உத்ஸாகத்தைக் கொடுக்கிறது.

அவன் வருவான் என்று எண்ணி அதற்குள் காபி போட்டு வைக்கிறாள்; பலகாரம் செய்து வைக்கிறாள். தலைவாரிப் பின்னிக்கொள்கிறாள். முகத்தைக் கழுவிப் பொட்டிட்டு மையிட்டுக்கொள்கிறாள். மாலைக் காலத்தில் களைப்புடன் வரும் காதலனுக்குமுன் புது மலர்ச்சி பெற்ற மலரைப்போல நிற்பதற்குத் தயாராகிறாள்.

மல்லிகைப்பூ மாலையில் வீதியிலே வருகிறது. வாங்கி வைக்கிறாள். ரோஜாப்பூ வாங்கி வைக்கிறாள். அவன் வந்தவுடனே அந்தப் பூவைச் சூட்டிக் கொள்ள வேண்டும் என்று அவற்றை வைத்திருக்கிறாள்.

அவள் முகமலர்ச்சிக்கும் மனமலர்ச்சிக்கும் சூட்டிக்கொள்ளும் புது மலர் சோபையைக் கொடுக்கிறது. காதலன் ஆசையோடு அந்த அழகுப் பிழம்பைக் கண்ணால் நுகர்ந்து களைப்புத் தீர்கிறான்; சிற்றுண்டி அருந்திப் பசியுந்தீர்கிறான்.

* * * *

தினந்தோறும் இவ்வாறு புதுமை யழகிலே ஒளிரும் மடமங்கையும் அதைக் கண்டு புத்துணர்ச்சி பெறும் காதலனும் ஒவ்வொரு நாளும் தம் வாழ்க்கையைப் புதுக்கிக் கொள்கிறார்கள்.

இந்த ரீதியிலே சென்றுகொண்டிருந்த துணைவர்களின் வாழ்வில் இடையே சிறு பிரிவு நேர்கிறது. காதலன் ஏதோ காரியமாக வெளியூருக்குச் செல்கிறான். சில நாட்கள் தங்கி விட்டு வரவேண்டிய வேலை இருக்கிறது. போய் அடிக்கடி கடிதம் எழுதுகிறான்.

அவன் பிரிந்திருக்கும் நாட்களிலே அவள் சுத்தத்தை உத்தேசித்து நீராடினாள்; முகங் கழுவிக்கொண்டாள். தலையை ஒருவாறு கோதி முடித்துக் கொண்டாள். வழக்கம்போல் அலங்காரம் செய்து கொள்ளவில்லை. மலர் வாங்கி வைத்துக் கொள்ள வில்லை. ஆபரணங்களைப் புனைந்துகொள்ளவில்லை. அவன் கண்களுக்கு விருந்து

செய்வதற்காக ஏற்பட்டவை அவை. அவன் தான் இல்லையே! இந்த அலங்காரங்கள் யாருக்காக? இது மட்டுமா? நாவிற்கு ருசியான சமையலை, விதவிதமான உணவுகளை சமைக்கத் தெரிந்தவள், அவள் அவனுடைய ருசிதெரிந்து சமைத்து உண்பிப்பவள். அவன் ஊரில் இல்லாவிட்டால் வழக்கப்படி சமைத்து அவள் உண்பதுதானே? அதுதான் இல்லை. ஏதோ வற்றல் குழம்பு செய்து வெறுஞ்சோற்றை வடித்து வயிற்றை நிரப்பிக் கொள்கிறாள். அவன் இல்லாதபோது அறுசுவை உண்டியாக இருந்தாலும் அவளுக்கு ருசிக்காது.

* * * *

அவன் ஒரு நாளைக் குறிப்பிட்டு அன்று மாலை வருவதாகக் கடிதம் எழுதியிருக்கிறான். அவளுக்கு உண்டான குதூகலம் வருணித்து முடிவதா, என்ன? வீட்டைப் புதுமுறையில் அலங்கரித்தாள்; தூசு தும்பையெல்லாம் தட்டினாள். புது மணவாளப் பிள்ளையை வரவேற்பதைப் போன்ற ஏற்பாடுகளையெல்லாம் செய்தாள். கடிதம் வந்ததுமுதல் அவளுக்கு ஒரு நிமிஷம் கழிவது ஒருயுகமாக இருந்தது. எப்பொழுது மாலைவரும் என்று ஏங்கிக் காத்துக்கிடந்தாள்.

மாலை வந்தது. தன்னை என்றும் இல்லாதபடி அலங்கரித்துக்கொண்டாள். மல்லிகைப் பூவும், ரோஜாப்பூவும் நிறைய வாங்கித் தொடுத்துவைத்தாள். இன்று அவன் கையாலேயே அந்த மலரைச்சூட்டிக்கொள்ள வேண்டும் என்ற ஆவல் அவள் உள்ளத்தே தீவிரமாக உண்டாயிற்று.

மாலை வந்தது. மலர் வந்தது. தென்றல் வந்தது. உலக முழுவதும் தண்ணென்ற உணர்ச்சி பரவியது. அவளும் தன் ஆருயிர்க் காதலனை எதிர்பார்த்து வாசலுக்கும் உள்ளுக்குமாகப் போய்ப் போய் வருகிறாள். வானத்தைப் பார்க்கிறாள். செக்கர்வானம் மறைந்து வெண்ணிலவு வெள்ளம் பெருகத் தொடங்கிவிட்டது. வானுலக முழுதும் ஒரேயடியாக மல்லிகை மலர் பூத்ததுபோல உடுக்கள் குபீரென்று தோன்றிப் பளிச்சிடுகின்றன. அவள் உள்ளே வைத்திருக்கும் மல்லிகை மலர் அவள் கருங்குழலிலே புகுந்து பளிச்சிட இன்னும் நேரம் வரவில்லை.

என்ன இது! நேரம் ஆகிக்கொண்டிருக்கிறது; காதலன் வரவில்லையே! இருட்டிவிட்டது. அவள் உள்ளத்திலும் இருள் புகுந்தது. அவள் வதனம் வாடத் தொடங்கியது. உள்ளே சென்று படுக்கையில் தொப்பென்று விழுகிறாள். உணவு கொள்ளவில்லை. எதிரே செப்பில் மல்லிகை அவளைக் கண்டு சிரிக்கிறது. ரோஜாப்பூ தன்னைப் பயன்படுத்திக் கொள்ளவில்லையேயென்று சிவக்கிறது.

அவளுக்குத் தூக்கம் வருமா? மனம் வாடி உடல் சோர்ந்து கண்ணீர் வார அவள் படுத்திருக்கிறாள். மல்லிகையும் ரோஜாவும் மெல்ல மெல்ல வாடுகின்றன. அவள் அவற்றிலே கண்ணைச் செலுத்துகிறாள்; உள்ளங் குமுறி வருகிறது.

பாட்டு:

மன்னன் வருவாரென்று
மல்லிகைப்பூ வாங்கி வைத்
மன்னன் வரவில்லையே!-[தேன்
மல்லிகைப்பூ வாடிப்போச்சே!
ராஜா வருவா ரென்று
ரோஜாப்பூ வாங்கி வைத்தேன்
ராஜா வரவில்லையே!
ரோஜாப்பூ வாடிப் போச்சே!

மலர் வாடிற்றா? அல்லது அவளது மெல்லிய பெண்ணுள்ளமாகிய மலர் வாடிற்றா? இரண்டுமே வாடி விட்டன.

# SANITARY FITTINGS



பர்ன் வெண்ணிற சலவைக்கல் சானிடரி பிட்டிங்குகள். இதைப்போன்ற மற்ற போர்ஸிலின் அல்லது களிமண் தயாரிப்புகளைக் காட்டிலும் உறுதியுள்ளவைகளாதலால் நீடித்த காலம் ஆரோக்கியமாய் உழைக்கும்.

அழகான அமைப்பு, அற்புத தோற்றம். இவை சுலபமாக உடையாது, வெடிக்காது. சுலபமாக சுத்தம் செய்யலாம்.

இந்தியாவில், இந்திய ஊழியர்களைக்கொண்டு, இந்திய மூலதனத்தைக் கொண்டு தயாரிக்கப்படுவது. மிதமான விலை. வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படும் சாமான்களின் ரகத்திற்கு இணையானது.

விவரமான புத்தகம் கேட்போருக்கு இலவசமாக அனுப்பப்படும்.

# BURN & CO., LTD.

ESTABLISHED 1781

BP-4(A)

12, MISSION ROW, CALCUTTA.

WORKS AT RANIGANJ AND JUBBULPORE

SAVE FOR VICTORY
BRITISH • WAR • SAVINGS MOVEMENT
ASK YOUR BANK

## பர்ன் & கம்பெனி லிமிடெட்,

ஸ்தாபிதம் : 1781

12, மிஷன்ரோ, கல்கத்தா.

தொழிற்சாலை : - ராணிகஞ்சு & ஜபல்பூர்.

சென்னை ராஜதானிக்கு ஏஜண்டுகள்:—

பம்பாய் கம்பெனி லிமிடெட், த. பெ. நெ. 109, மதராஸ்.

# நாக கன்னிகை

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

சிறைசெய்து கொண்டு போவோம்'' என்று கர்ச்சித்தனர்.

### துணிவு உண்டா?

"ஓ, அப்படியா! அவ்வளவு துணிவு உங்களுக்கு உண்டா? கப்பல்களில் நீங்கள் புகும்வரையில் நாங்கள் பார்த்திருக்கமாட்டோம். வீரர்களே, வேண்டாம்! எங்களிடம் ஒன்றுமில்லை. நாங்கள் யாத்திரைக்காக வந்து, புகார் நகரிலிருந்து போகிறோம். வழிவிட்டுப் போங்கள்'' என்று நயந்தும், கடிந்தும் கூறினான். அவ்வளவிலே சட்டென்று ஒரு பேரிரைச்சல் கேட்டது. உடனே வாளேந்திய வேளிர் வீரர் ஐம்பதின்மர் நாகநாட்டுக் கப்பலில் ஒவ்வொன்றிலும், பந்து குதிப்பன போல் குதித்துத் தாவி, நீலன் இருந்த கப்பலில் தாவிக் குதித்தனர்.

மெய் பதறிப் போனான் நீலன். நாகநாட்டு வீரர் பலர் பின் தொடர்ந்து வேளிரைத் தாக்கினர். நீலன் கையில் வேலைத் தாங்கி வேளிர் வீரரைத் தாக்கினான். ஓரிருவர் மார்பிலிருந்து இரத்தம் பெருகக் கீழே சாய்ந்தனர். நீலன் கப்பலில் நாகநாட்டு வீரர்கள் வந்து சூழ்ந்து நின்று வேளிரைத் தாக்கவே, பின்னே வேளிர் கூட்டம் வேறொன்று பின் தொடர்ந்தது. நாகருக்கும் வேளிருக்கும் பெரும்போர் மூண்டது. நீலன் வீராவேசத்துடன் வேல் கொண்டு தாக்கினான். நாக கன்னிகை இருதயம் பதைபதைத்து, மெய் பதறினாள். நாக கன்னிகை நடுவில் புகுந்து கொண்டு ஒருபுறமாக ஓடி அசைவற்று நின்றாள். நாகரும் வேளிரும் போரிடும் அதிர்ச்சியால் கப்பல் தத்தளித்தது. நீருள் மூழ்கிவிடும்போல் கீழும் மேலும் ஆடி அசைந்து பயத்தை உண்டாக்கியது. கப்பலோடு கப்பல்கள் மோதுண்டன.

### நீலன் இருக்கையில் என்ன?

நாககன்னிகை முதலிய நங்கையர், புலிக் கூட்டம் கண்ட மான் தொகுதி போல் அங்கு மிங்கும் மறுகியோடி நிலை கலங்கும்படியாயிற்று. நீலன் அதைக் கண்டான். போரிடுவதால் நாககன்னிகையை இழக்க நேரிடும் என்று உணர்ந்தான். உடனே சட்டென்று போரிடாமல் வேளிரிடம் அகப்பட்டுக் கொண்டான். "போரிடாதீர்கள்; எதிர்ப்பை விட்டு விடுங்கள், சாந்திமத் தீவிற்கே போவோம்'' என்று கூவினான். வேளிர் வீரர் வியப்புற்று, உடனே நீலனை விலங்கிட்டனர். நாக வீரர் அது கண்டு அஞ்சிப் போரை நிறுத்தினர். நாககன்னிகை அந்தக் காட்சியைக் கண்டு நீர் ததும்பும் கண்களோடு நிலை சோர்ந்து போனாள். "நீலா! நீலா! சாந்திமத் தீவிற்குப் போக வேண்டுமா? வேறு வழியில்லையா?'' என்று தழுதழுத்த குரலோடு கேட்டாள் நாககன்னிகை.

"ஆம்! வேறு வழியில்லை; அங்கே போன பின் வழி செய்து கொள்ளலாம். நீ இதற்குப் பயப்படாதே; நீலன் இருக்கையில் உனக்கு ஒன்றும் நேராது'' என்று அமைதியோடு கூறினான்.

### நாககன்னிகையின் துயரம்

சட்டென்று வேளிர் கூட்டத்தின் பார்வை நாககன்னிகையிடம் சென்றது. அவள் மேனியில் உயர்ந்த ஆபரணங்கள் ஒளி வீசுவதைக் கண்டு குதூகலம் கொண்டனர். "ஆ! இவள் நல்ல அழகி! இவளைக்கொண்டு சென்றால் நம் அரசர் அளவற்ற ஆனந்தம் அடைவார்'' என்று கோஷமிட்டனர். நீலன் கண்கள் சிவந்தன. "மூர்க்கர்களே, உங்கள் விருப்பம்போல் சாந்திமத் தீவிற்கு வருகிறோம். வீணே அவமான, வார்த்தைகள் வேண்டாம்'' என்று கடிந்து கூறினான். நாககன்னிகை எல்லையற்ற சோகத்தில் ஆழ்ந்தாள். "ஐயோ, நான் ஏன் இவ்விதக் கீழ் நிலைக்கு ஆளானேன்? தெய்வமே! இனி நான் வாழ்வதை விடச் சாவதே மேல் அல்லவா? நான் என்ன செய்வேன்?'' என்று தலை கவிழ்ந்தவளாய்க் கண்ணீர் பெருக்கி அழுது உருகினாள்.

கப்பல்கள் சாந்திமத்தீவை நோக்கிப்புறப்பட்டன. நாக நாட்டுக் கப்பல்களின் கூட்டத்திலிருந்து ஒரு தோணி மட்டும், வேளிர் கூட்டத்துக்குத் தப்பிக் காவிரிப்பட்டினத்தை நோக்கி மிகக் கடுகிச் சென்றுவிட்டது. அந்தத் தோணியில் நால்வர் நாகநாட்டு வீரர் இருந்தனர். அந்தத் தோணியைப் பின் தொடர்ந்து சிறிது தூரம் சென்றது வேளிரின் தோணி ஒன்று. ஆனால் அந்தத் தோணி மிக விரைவில் வேறு வழியே சென்று விட்டது.

கப்பல்கள் யாவும் சாந்திமத் தீவுக்குள், துறையிலே புகுந்தன. நாகநாட்டு வீரர் யாவரையும் கப்பல்களிலிருந்து வெளியேற்றித் தீவின் கரையிலே போகவிட்டனர். நீலனையும், நாககன்னிகை முதலிய பெண்களையும் சுற்றிப் பலவீரர் காவலுடன் சென்றனர். கப்பல்களிலுள்ள பொருள்களையெல்லாம் வாரிக்கொண்டு, சாந்திமத்தீவுக்குள் புகுந்து அரசன் மாளிகையை அடைந்தனர்.

### வீரை வேளின் வியப்பு!

பொழுதும் நன்றாகப் புலர்ந்தது. வேளிர்குலத்து வீரனும் அந்தத் தீவின் தலைவனுமான வீரைவேளுக்கு முன் யாவரும் நிறுத்தப்பட்டனர். அவர்களிடமிருந்து பறித்த பொருள்களையும் அரசன்முன் வீரர் சேர்ப்பித்தனர். நூற்றுவருக்கு மேற்பட்ட அந்நாக வீரர்களையும், அவர்கள் நடுவிலே இறுமாந்து நிற்கும் நீலனையும், நாககன்னிகையும் அவன் கண்டு வியப்படைந்தான். சிறைசெய்து வந்த வீரர்களைக்கொண்டு, அவர்கள் நாகநாட்டினர் என்பதை அறிந்தான்.

வீரைவேளின் அருகிலே நின்ற அவன் மகள் நல்லினி நாகநாட்டு வீரர்களின் நடுவே நிற்கும் நாககன்னிகையைக் கண்டாள். அவள் மனம் நாககன்னிகையிடம் பெரிதும் ஈடுபட்டது. அவளுக்கு அருகில் நிற்கும் வீரன் நீலனையும் கண்டாள்.

ஒரு முறை அவனை நோக்கியவள் மிகவும் தடுமாற்றம் அடைந்து நாககன்னிகையின் காதலனோ இவன் என்று அஞ்சினாள். நாக கன்னிகையும் நல்லினியின் முகத்தை ஏறிட்டு நோக்கியவாறே இருந்தாள்.

# இதுதான் ஜப்பானியர் செய்யக்கூடியது!

உலகிலுள்ள ஒவ்வொரு நாட்டுக்கும் குறிப்பான விசேஷ குணங்கள் உண்டு. ஆசிய வாசிகளில் இந்தியராகிய நாம் அமைதியை விரும்புபவர்கள். சுறுசுறுப்பாக உள்ளவர்கள், பொறுத்துப் போகக்கூடியவர்கள். பழைய பெருமைகளில் மூழ்கியவர்களாக இருப்பினும் வருங்காலத்தில் வெகு குறியாக இருப்பவர்கள். சீனக்காரரோ இப்பொழுதுதான் புத்துயிர் பெறுகிறார்கள். மனித சமூகத்தில் தமக்கு ஒரு இடம் பெறத் தேவையான வீரம், தைரியம், அன்பு முதலியவற்றைப் பெற்றிருக்கிறார்கள்.

## ஆனால் ஜப்பானிய பாஸிஸ்டுகளோ?



என்ன இழிவான சாதனை செய்திருக்கிறார்கள்! ஆசியவாசிகளுக்கு எத்தகைய கெட்ட பெயரைத் தேடித் தந்திருக்கிறார்கள். கொடூரமானவர்கள், டம்பக்காரர்கள், துரோகிகள், எதையும் மற்றவர்களைப்போல் செய்ய பார்ப்பவர்கள், புதியவற்றை தாமாகச் செய்ய இயலாதவர்கள். அவர்களுடைய இழி குணங்களுக்குச் சிகரம் போன்றது அவர்களுடைய அகம்பாவம். "கடவுள் ஆணையால் நாங்கள் உலகத்தை வென்றவர்கள். நாங்கள் குற்றமே செய்யாதவர்கள்." இதுவே அவர்கள் சொல்லுவது மட்டுமல்ல பூராவாக நம்புவதும் இதுவே.

இத்தகைய நாட்டினரை நசுக்க ஒரே வழிதானுண்டு. அவர்களுடைய பலத்தைப் பிடுங்க வேண்டும். விஷமம் செய்யாதபடி அவர்களுடைய பற்களைப் பிடுங்க வேண்டும். ஒரே வார்த்தையில் சொல்லப்போனால் "அவர்கள் நிபந்தனையின்றி சம்பூர்ண சரணாகதியடைய வேண்டும்." அதற்குக் குறைந்தது உதவாது.

### நீலனின் முழக்கம்

"அடே, நீ யார்? மிகவும் இறுமாப்போடு நிற்கிறாயே!" என்று கேட்டான் வீரைவேள். நீலன் நாகம் போல் சீறியவனாய் நோக்கினான்.

"என்னையா கேட்கிறாய்? பேதையே! நான் நாகநாட்டு வீரன்; இதோ இவள் நாகநாட்டு அரசிளங்குமரி நாககன்னிகை. இவளுக்கு உயிர்த் தோழன் நான். தெரிந்ததா? இனி நான் சொல்வதைக்கேள்! எங்கள் யாவரையும் இப்போதே விடுதலை செய்து அனுப்பினால் நீ உயிரோடு இருப்பாய்! இல்லையேல் நாகநாட்டு அரசன் வளைவணன் உனக்கு யமனாவான்!" என்று உறுதியோடு கூறினான்.

"ஓ, என் முன்னிலையில் நீ இவ்வளவு துணிவோடு பேசுகிறாயா? இதோ உனக்குத் தண்டனை கிடைக்கப்போவதைப் பார்" என்று கூறி விட்டு அருகில் இருந்த பணிப்பெண்களை அழைத்தான்.

"இதோ, இந்த அரசிளங்குமரியையும் மற்றுமுள்ள நாகநங்கையர்களையும் துர்க்கை கோட்டத்தில் ஊழியம் செய்யச்சொல்லுங்கள். இதோ நிற்கும் நாககன்னிகை, எல்லா அழகும் வாய்ந்திருப்பதால் தேவிக்குப் பணிவிடை செய்யத் தகுதியுடையவள், அழைத்துச்செல்லுங்கள்" என்று கட்டளையிட்டான். உடனே பணிப்பெண்கள் முன்னே வந்தனர்.

வீரைவேள் மகள் நல்லினி அதைக் கண்டு உள்ளம் கலங்கினாள். உடனே முற்பட்டு நாககன்னியின் முன் சென்றாள். அவளை அன்புடன் தழுவிக் கொண்டு ஒரு புறமாக நின்றாள். வீரைவேள் அதைக்கண்டு வியப்போடு அவளைப் பார்த்தான்.

"ஐய, இவள் என் கன்னிமாடத்தில் என்னுடன் இருக்கட்டும். எனக்கு உயிர்த்துணைவியாக இவள் இருப்பாள். இவளைத்துர்க்கை கோட்டத்திற்கு அனுப்ப வேண்டாம்" என்று அவள் தந்தையைக் கேட்டுக்கொண்டாள். வீரைவேள் அதுவும் நேர்மையானதே என்று எண்ணி, "நல்லினி, உன் விருப்பம் போல் அழைத்துச் செல். இவள் அரசிளங்குமரி ஆதலால் உன் நன்மதிப்பிற்கு உரியவள்தான்" என்றான்.

### பின்னர் பார்ப்போம்

நீலன் மறுகி மறுகி நல்லினியின் அன்பையும், அவள் தன்மையையும் கண்டு மெய்ம்மறந்தான். நாககன்னிகைக்கு உற்ற துணை கிடைத்தது. இனி பார்த்துக்கொள்வோம் என்று மனம் துணிந்து, "நாககன்னிகை, இந்த அரசனின் மனம் இரும்பாக இருந்தாலும் இவன் மகள் மனம் அன்புடையது. உனக்கு அவள் தொடர்பு ஆறுதல் அளிக்கும். அழகும் அன்பும் ஒருங்கே குடி கொண்ட இந்த நங்கை, இவன் மகளோ என்று சந்தேகமுண்டாகிறது. எவ்வாறோ உனக்கு நல்ல துணை கிடைத்தது. ஆறுதலுடன் இரு, பின்னர் பார்த்துக்கொள்வோம்" என்று அமைதியாகக் கூறினான்.

அவன் வார்த்தையைக் கேட்ட, அந் நல்லினி, கருவிழிகளால் ஒரு முறை அவனை நோக்கினாள். நீலனுக்கு அவள் பார்வை உள்ளத்தைக் குளிரச் செய்தது. சட்டென்று அவள் நாககன்னிகையைத் தழுவி அழைத்துக் கொண்டு, கன்னிமாடத்தை நோக்கிச் சென்றாள். விம்மிப் பொருமி உள்ளம் உருகியவாறே நாககன்னிகை, நீலன் முதலியவரை அன்பு கனிய நோக்கி விட்டுச் சென்றாள். சாந்திமத்தீவின் பின்புறம் கன்னிமாடம் விளங்கியது. மலைப் பாறைகளையே குடைந்து அமைத்த மாளிகை அது. கன்னிமாடத்திற்கு முன்பாகப் பிறைச் சந்திரன் போன்று, அம்மாளிகையை வளைத்து ஒரு சுனை விளங்கியது. சுற்றிலும் மலைப் பாறைகளையே அரணாக உடைய கன்னிமாடத்திற்குள் ஒரு தடாகம் தென்பட்டது. அதன் கரையிலே உள்ள மஞ்சத்தில் நாககன்னிகையும் நல்லினியும் அமர்ந்தனர். மலையுச்சியிலிருந்து சிறு சந்து வழியே, சலசலவென்று ஒழுகி வரும் ஊற்று நீர் தடாகத்தில் விழுவதைக் கண்டவாறே இருவரும் அளவளாவினர். நாககன்னிகையின் வரலாற்றை மிக்க விருப்பமுடன் நல்லினி கேட்டாள்.

நாகநாட்டிலிருந்துதான் புகார் நகர் சென்றதையும், கிள்ளியிடம் காதல் கொண்டு வாழ்ந்ததையும், தான் அவனைப் பிரிந்து வந்த காரணத்தையும் ஒன்று விடாமல் நல்லினியிடம் கூறிக் கொண்டிருந்தாள். நல்லினி கேட்டவாறே அவளுடன் அமர்ந்திருந்து ஆறுதல் கூறிக் கொண்டிருந்தாள்.

### கடலில் நீலன் தவிப்பு

இந் நிலையில். நீலன் முதலிய வீரர் நூற்றுவரையும் அவரவர் முகத்தைக் கறுப்பு நிறத் துகிலால், மூடிக்கட்டி, வீரைவேளின் கட்டளைப்படி, அவர்களை, மிக நெருக்கமான பாறைகளையுடைய கடல் துறைக்கு அழைத்துச் சென்றனர் வேளிர் வீரர்கள். உடனே நூற்றுவர் வீரர்க்கும் தனித் தனியே, கடலில் நீந்துவதற்குத் தெப்பங்களைக் கொடுத்து அதிலே அவர்களைக் கட்டிக் கடலிலே தள்ளி விட்டனர். அலை மிகுதியும் ஆழமுள்ளதும் கரையேற முடியாததுமான அந்தத் துறையிலிருந்து அவர்கள் தெப்பங்களோடு இழுத்துச் செல்லப்பட்டனர். அலைகள் அவர்களை மிக வேகமாக மோதி எறிந்து நெடுந் தூரத்துக்கு அப்பால் தள்ளிக் கொண்டே போயின. 'ஆ ஆ' என்று ஓலமிட்டவாறே யாவரும் உயிருக்கு மன்றாடித் தவித்த வண்ணம் நீந்திச் சென்றனர். அவர்கள் மடிந்தனரோ பிழைத்தனரோ யாரால் கூற முடியும்? ஆனால் யாவரையும்போல் நீலன் நெடுந்தூரம் போகவில்லை. முகத்தை மூடியிருந்த கறுப்புத் துகிலைக் கிழித்தெறிந்துவிட்டு அலைகளோடு போரிட்டு எதிர்த்து நீந்தினான். சாந்திமத் தீவின் பின்புறமாக உள்ள மலைப் பாறைகளில் தொற்றிக் கரையேறி விடலாம் என்பது அவன் எண்ணம். ஆனால் அலைகள் அவனுக்கு எதிராகப் போராடின. எனினும் அவன் ஊக்கம் குறையவில்லை. அலைகளை எதிர்த்தும், அலைகளால் தாக்கப்பட்டும் தடுமாறித் தத்தளித்துக் கொண்டிருந்தான்.

(தொடரும்.)

டில்லியில் சட்டசபைகளின் கூட்டுக் கட்டடத்தில் தமது பிரசங்கத்தைச் செய்து விட்டு வைஸ்ராய் வேவலும் அவரது மனைவியும் வெளியே வருகின்றனர். இக் கூட்டத்தில் பிரஸன்னமாயிருந்த லூயி மவுண்ட் பாட்டன் பிரபுவும் சபையை விட்டு வெளியே வருகிருர்.

(வலது)

1940-ம்வருஷம் பிரான்ஸ் யுத்தத்தில் கலந்து கொண்ட இந்தியத் துருப்புகள் இப்போது இந்தியா திரும்பி விட்டன. மேஜர் ஜெனரல் ஆலன் துருப்புகளைப் பார்வையிட்டபோது எடுத்த படம்.



சிறுவர் கதை

# பால்கன்-ஜீ-பாரீ

★

அன்பார்ந்த
சகோதர சகோதரிகளே!

தாரபூர் என்னும் ஊரிலே ஒரு பெரிய வியாபாரி இருந்தான். அவனிட மிருந்த செல்வத்துக்கு அளவே கிடையாது. அவனை மிஞ்சின பணக்காரன் அவ்வூரில் யாரும் இல்லை. குடியிலோ, சூதாட்டத்திலோ அவன் ஒரு பைசாக்கூட வீணுக்க மாட்டான். ஆனாலும் அவனது வரவு நாளுக்கு நாள் குறைய ஆரம்பித்து, கடைசியில் கடனும் வந்து விட்டது.

அவனுடைய நண்பர்கள் அவன் நிலைமையைக் கண்டு மனமிரங்கினார்கள். அவனுக்கு பணம் கொடுத்து உதவினார்கள். அப்படியிருந்தும் அவனுடைய நிலைமையைச் சீர்படுத்த முடியவில்லை. அவனுடைய நண்பர்களில் ஒருவர் முதிர்ந்த வயதும் முதிர்ந்த அனுபவமும் உள்ள ஒரு வியாபாரி. அவர் ஆலோசித்துப் பார்த்ததில், நண்பனுடைய வீழ்ச்சிக்கு மூல காரணம் அவனிடமிருந்த சோம்பலே என்ற முடிவுக்கு வந்தார். அது விஷயமாக சிநேகிதனுக்கு புத்தி கூறவும் எண்ணினார்.

ஒரு நாள் அந்த சோம்பேறியான வியாபாரி சாப்பிட்டு விட்டு சும்மா உட்கார்ந்து கொண்டிருக்கும் சமயம் வயதான நண்பர் வந்தார். நாளைக் கழிப்பதற்கு ஒரு நண்பர் கிடைத்தார் என்று அவன் சந்தோஷப் பட்டான். அவரோ சமயத்தை அதிகம் வீணாக்காமல், வந்த காரணத்தைத் தெரிவித்தார். "சிநேகிதா, நான் உன்னிடம் ஒரு புத்திமதி கூறுவதற்காக வந்திருக்கிறேன். நாங்கள் செய்த பண உதவி உனக்குச் சிறிதும் பயன்படவில்லை. உன்னிடம் ஒன்று சொல்லப் போகிறேன். அதன்படி நடந்தால், நீ செல்வவந்தனாகி சுகமாய் வாழ்வாய்" என்று கூறினார் அவர்.

சோம்பேறியானாலும் நல்ல மனதுடைய அந்த வியாபாரி அதற்கு "அது என்ன? சொல்லுங்கள், அது போல நடக்க முயற்சிக்கிறேன்" என்று பதிலுரைத்தான்.

பெரியவர் சந்தோஷப் பட்டு மேலும் சொன்னார். "நீ செய்ய வேண்டியது மிகவும் சிறிய காரியம் தான். ஒவ்வொரு நாளும் அதிகாலையில் நட்சத்திரங்கள் மறை



ஸிவில் சப்ளை இலாகா அஸிஸ்டெண்டு செக்ரிடரி ஸ்ரீ கிருஷ்ணய்யர் சகோதரர் டாக்டர் பி. ராமஸாமி ஐயரின் குமாரத்தி சௌபாக்யவதி ஸரோஜாவுக்கும், சிரஞ்சீவி முத்துஸாமிக்கும் சமீபத்தில் விவாஹம் நடைபெற்றது.

## நன்றி அறிவிப்பு



சிவகாமு — சிதம்பரம்

12-2-44 அன்று எனது புத்திரி சௌபாக்கியவதி சிவகாமு அம்மாளுக்கும், சிரஞ்சீவி ஏ. கே. சிதம்பரம் செட்டியாருக்கும் நடந்தேறிய விவாகத்தின் பொழுது, வாழ்த்துச் செய்திகள் அனுப்பி என்னை கௌரவித்த எனது உற்றார், உறவினர், நண்பர்களனைவருக்கும் எனது மனமார்ந்த நன்றியை இதன் மூலம் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

எஸ். ரத்னசாமி செட்டியார்,
வெள்ளி & பொன் வியாபாரம், சிதம்பரம்.

# உங்கள் மகனுக்கு 50% அதிகப் படிப்பு வசதி



இன்று இவன் சிறுவன்தான். அவன் வருங்காலத்தைப்பற்றி நீங்கள் இன்பக் கனவுகள் காண்பது இயற்கையே.

அவனுக்குச் சிறந்த கல்வியை யளிக்கத் தேவையான பணத்தை கடைசிநேரத்தில் ஒருமிக்கப் பெற உங்களால் முடியாது. புத்திசாலித்தனமான பெற்றோர்கள், தங்கள் பிள்ளைகள் வருங்காலத்தில் கீர்த்தியுடன் விளங்கவேண்டுமென்ற எண்ணத்துடன் அவர்கள் படிப்புச் செலவுக்காகப் பணம் சேர்க்கிறார்கள். அத்தகைய பெற்றோர்களைப் போல நீங்கள் இருக்க விரும்புகிறீர்களா?

பையன் படிப்புக்காக எவ்வளவுதான் சேர்த்து வைத்திருந்தாலும், சமயம் வரும் போது "அவனுக்காக இன்னும் கொஞ்சம் சேர்த்திருக்கலாமே" என்றுதான் சொல்லுவீர்கள். நாஷனல் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுகள் வாங்கி சேமிப்பதன் மூலம் அவனுக்கு நீங்கள் அதிகம் சேர்த்து வைக்க முடியும். அப்படி ஏன் செய்யக்கூடாது? நாஷனல் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட் ஒவ்வொன்றும் இன்று ரூ. 10-க்கு கிடைக்கும். 12 வருஷங்களுக்குப் பின் அதன் உத்திரவாதமுள்ள மதிப்பு ரூபாய் 15. உங்கள் புத்திசாலித்தனமான போக்கினாலே உங்களுடைய பையனின் கல்வி பாதி அளவிற்கு மேம்பட்டிருக்கிறது. முதல் மூன்று வருஷங்களுக்குப் பிறகு எப்பொழுது வேண்டுமானாலும் நாஷனல் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுகளைப் பணமாக மாற்றிக்கொள்ளலாம். இந்த சர்ட்டிபிகேட்டுகளில் முதலிட்ட தொகைகளுக்கு வருமானவரி கிடையாது. ஒவ்வொருவரும் ரூ. 5,000 வரைக்கும் இந்த சர்ட்டிபிகேட்டுகளை வாங்கலாம்,

**உங்கள் சேமிப்பை யெல்லாம் லாபமும், பத்திரமும் உள்ள**

# நாஷனல் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுகளை

**வாங்குவதில் உபயோகியுங்கள் — இன்றே தொடங்குங்கள்!**

**பதிவு செய்தல் — ஒரு நல்ல முன்னேற்பாடு**

அஸாம், வங்காளம், பீஹார், ஒரிஸா, சென்னை மாகாண வாசிகளின் சௌகரியத்துக்காக, லக்ஷ்மணபுரியில் ஐக்கிய மாகாண போஸ்ட் மாஸ்டர் ஜெனரலின் மேற்பார்வையில் ஒரு மத்தியப் பதிவு ஆபீஸ் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இங்கு டிபென்ஸ் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுகள், தபாலாபீஸ் காஷ் சர்ட்டிபிகேட்டுகள், நாஷனல் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுகளை வைத்திருப்பவர்கள் தங்கள் சர்ட்டிபிகேட்டுகளின் விவரங்களை இலவசமாகப் பதிவு செய்துகொள்ளலாம். இதன் மூலம், சர்ட்டிபிகேட்டுகள் காணாமற் போனாலுஞ் சரி; அழிந்து விட்டாலுஞ் சரி; தங்கள் உரிமையை நிரூபிப்பது சுலபம். பூரா விவரங்களையும் உங்களூர் தபாலாபீசில் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்.

ஸேவிங்ஸ் பாங்கி உள்ள எந்தத் தபாலாபீசிலும்
நாஷனல் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுகளை வாங்கலாம்.



ரங்கூன் வாட்ஸன் கம்பெனியிலிருந்த ஸ்ரீ பி. ஆர். ராமஸ்வாமி ஐயங்கார் பெண் சௌ. பி. ஆர். ஜயலக்ஷ்மிக்கும், மைசூர் ஸ்ரீநிவாஸ் எலக்டிரிக் பிரெஸ் சொந்தக்காரர் ஸ்ரீ டி. எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் குமாரர் ஸ்ரீ கே. ஸ்ரீநிவாஸமூர்த்திக்கும் சமீபத்தில் விவாகம் நடந்தது.

யும் முன்னே எழுந்திரு, அப்பொழுது ஆகாயத்தில் உயரே, மானஸ தடாகத்திலிருந்து ஒரு கொக்கு பறந்து வருவதைக் காண்பாய். காலையில் இந்தக் கொக்கைக் காண்பதற்கு முன் உணவருந்துவதில்லை என்று பிரதிக்ஞை செய்து கொள் நண்பா. அப்படிச் செய்தால் உன் வீட்டில் லட்சுமி வாசம் செய்வாள்''

"இவ்வளவு தானா? எவ்வளவு இலகுவான காரியம்!" என்று புன்முறுவலுடன் பதிலளித்தான் வியாபாரி. நண்பரும் பிரிந்தார்.

மறுநாள் வியாபாரி அதிகாலையில் எழுந்திருந்து வெளியே வந்து, கொக்கு வருகிறதா என்று ஆகாயத்தையே பார்த்துக் கொண்டு நின்றான். ஆகாயத்தில் லட்சக் கணக்காக மின்னும் நட்சத்திரங்களைத் தவிர வேறொன்றும் காணப்படவில்லை. ஒரு வேளை கொக்கு தடாகத்திலிருந்து இன்னும் புறப்பட்டிருக்காது என்று அவன் நிச்சயித்தான். வெகு சீக்கிரம் எழுந்துவிட்டதால் அவனுக்கு எஞ்சியிருக்கும் இரவை எப்படிக் கழிப்பதென்றுதெரியவில்லை. தனது பண்டசாலைக்குப் போகலாம் என்று தீர்மானித்து அவ்விடத்தை நோக்கி நடந்தான்.

பண்டசாலை திறந்து கிடந்தது அவனுக்கு அதிசயமாக இருந்தது. உள்ளே போய் பார்த்தபொழுது அவனுடைய வேலைக்காரன் அரிசியையும் தானியங்களையும் திருடுவதைக் கண்டான். அவ்வாறு அவன் செய்வதற்குக் காரணம் தன்னுடைய உதாசீனமும் கவனக் குறைவும் தான் என்று வியாபாரி அறிந்து கொண்டான். உடனேயே அவ்வேலைக்காரனை வேலையிலிருந்து நீக்கிவிட்டு வேறு ஏற்பாடுகள் செய்தான்.

பிறகு வியாபாரி அவனுடைய மாடுகளைக் கட்டியிருக்கும் இடத்திற்குப் போனான். அங்கே, இடையனும் அவன் வீட்டாரும் அவர்களுக்கு வேண்டுமளவு பாலைக் குடித்துவிட்டு மீதியைச் சந்தையில் விற்க அனுப்பி கொண்டிருப்பதைக் கண்டான். அவர்களைக் கண்டித்து விட்டு வியாபாரி வயல்களைப் பார்க்கப் போனான்.

சூரியோதயம் இன்னும் ஆகவில்லையாதலால் வேலைக்கு யாரும் வந்திருக்கவில்லை. ஆனால் அவனுடைய வயலில் அயலாருடைய மாடுகள் மேய்ந்து கொண்டிருந்தன. பச்சைப் பசேலெனவிருக்கும் பயிர்களையெல்லாம் அவை தின்று கொண்டிருந்தன. அதைப் பார்த்த வியாபாரிக்கு நண்பர் கூறியதன் பொருள் விளங்கியது. சோம்பலால் அடைந்த கஷ்டங்களைத் தான் உணரும்படி செய்வதற்கான ஓர் உபாயமே கொக்கின் கதை என்று அவன் அறிந்து கொண்டான்.

அன்று முதல் அவன் எல்லாக் காரியங்களையும் தானாகவே மேல் பார்வையிட்டு வந்தான். சில மாதங்களில் அவன் முன் போலவே பெரிய பணக்காரனாகி விட்டான்.

—[சகோதரன் ஏ. வி. நாதன்.]

* * * *

சென்ற வாரப் புதிருக்கு விடை:—

குடியானவன் நிலத்தைப் பங்கிட்டவிதம் இந்தப் படத்



தில் காட்டப்பட்டிருக்கிறது

சகோதரன் ஹரி.

---

25-2-44 வெள்ளி முதல்

# 2nd HOUSE-FULL WEEK

MADRAS
**STAR**
BANGALORE
**SELECT**



# Shakuntala



IT'S RAJKAMAL

PRODUCED AND DIRECTED BY :-
**V. SHANTARAM** •

FEATURING:-
**JAYASHREE & CHANDRAMOHAN**

G. H. RAO

# சகுந்தலா

**ஸ்டார்**

தினசரி 2 காட்சிகள்: 6-30 & 9-30.
சனி, ஞாயிறுகளில் மாட்டினி. பகல் 3-30 மணிக்கு

Printed and Published by T. S. Visvanatha Iyer, B. A., at the "Swadesamitran" Power Press, Mount Road, Madras. Editor: C. R. Srinivasan...